Regd. No. M. 5954

Phone: No. 2241

**சென்னை சட்ட சபை இன்று கூடுகிறது**

சென்னை, செப். 3—

சென்னை சட்டசபைக் கூட்டம் இன்று முற்பகல் 11-மணிக்கு ஆரம்பமாகும். இந்தத் தடவை சட்டசபைக் கூட்டம் நான்கு வாரங்கள் நடக்கும். பிடிச்சட்டம், விவசாய வருமானவரி, தேசிய விடுமுறைநாள் முதலிய பல மசோதாக்கள் விவாதிக்கப்படும்.


# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்

JANASAKTHI


**பட்டினி ஒழிந்தால் பாரில் அமைதியுண்டு!**

மைசூர், செப். 2—

உலகில் பட்டினி முற்றாக ஒழிக்கப்பட்டால்தான், உலக சமாதானத்திற்கு வழியேற்படும் என்று இங்கு நடைபெற்ற விவசாயப் பொருளாதார நிபுணர்களின் பத்தாவது சர்வதேச மாநாட்டில் பேசிய ஒரு அமெரிக்க விவசாய நிபுணர் கூறினார்.

மலர் 15 இதழ் 19 ] சென்னை 3-9-58 விளம்பி௵ ஆவணி௴ 18உ புதன்கிழமை (வெளியூர் பதிப்பு) [ 4 பக்கங்கள் 7 காசுகள்

# இந்திய மக்கள் மீதும் நேரு மீதும் அவதூறு!

## 'கடன் வாங்கப் போகுமுன் அமெரிக்க பத்திரிகைக்கு மொரார்ஜி அளித்த பேட்டி!

### ராஜ்ய சபையில் கம்யூனிஸ்ட் எம். பி. பூபேஷ் குப்தா கடும் ஆட்சேபம்!

புதுடில்லி, செப். 1—

இன்று ராஜ்ய சபையில் கேள்விநேரம் முடிந்தவுடனேயே, மத்திய நிதி மந்திரி மொரார்ஜி தேசாய், தான் இந்தியாவை விட்டு அமெரிக்காவுக்குப் புறப்படும் தருணத்தில் "டைம்" என்ற அமெரிக்கப் பத்திரிகைக்கு அளித்த பேட்டி சம்பந்தமாக அவசர பிரச்சினை ஒன்று கிளப்பப்பட்டது.

இப்பிரச்சினையைக் கிளப்பிய கம்யூனிஸ்ட் உறுப்பினர் பூபேஷ் குப்தா, நிதி மந்திரி இந்திய மக்களை அவதூறு செய்துள்ளார். பிரதம மந்திரியை சிறுமைப் படுத்தும் முறையிலும் பேசியுள்ளார், என்று குற்றம் சாட்டினார்.

"இந்தியாவின் ஒரு நிதி மந்திரி பண உதவி பெறுவதற்காக வாஷிங்டனுக்குப் போகும் ஒவ்வொரு சமயத்திலும் அவர் பத்திரிகை நிரு[illegible]க்குப் பேட்டி கொடுத்து, இ[illegible] மக்களைச் சிறுமைப் படுத்தக்கூடிய முறையில் ஏதாவது பேசவேண்டுமா? இது மிகவும் கடுமையான விஷயம். நாம் இதை விவாதிக்க வேண்டும் என்று பூபேஷ் குப்தா கூறினார். சபைத் தலைவர் டாக்டர் ராதாகிருஷ்ணன், அந்தப் பேட்டியின் விபரங்களைத் தன்னிடம் கொடுக்கும்படியும், தான் அதை சர்க்காரிடம் சமர்ப்பித்து விடுவதாகவும் கூறினார்.

செப்டம்பர் 1-ந்தேதிய 'டைம்' பத்திரிகையில் நம் நிதி மந்திரியை பற்றிய ஒரு குறிப்பும், 'டைம்' நிருபருக்குக் கடந்த வாரம் அளித்த பேட்டியும் [illegible]ளது.

**'டைம்' நிருபருக்கு மொரார்ஜியின் பேட்டி**

அந்தப் பேட்டியில் மொரார்ஜி கீழ்வருமாறு கூறியதாக இருக்கிறது. "இந்தியர்கள்: எங்கள் சகாக்களைப்பற்றி விரோதமாகப் பேசுவது என்பது எங்களுடைய மோசமான குணம். நாங்கள் பலஹீனமான மக்கள். உடற்கூறு ரீதியாகவும், மனம் ரீதியாகவும் கோழைகள். இரண்டாயிரம் வருடமாக ஒடுக்கப்பட்டுக் கிடந்ததால் நாட்டின் தைர்யம் குலைந்துவிட்டது. 'எதைக் கண்டும் பயப்படும் சுபாவத்தைப் பெற்றுள்ளோம். பிரிட்டிஷ் ஆட்சியின்கீழ் வரிகொடாமல் தப்பிப்பதைக் கற்றோம். சட்டங்களை ரகசியமாக மீறினோம். பொய் சொல்வது உபயோகமானது என்று தெரிந்தோம். ஆனால் இப்பொழுது மக்கள் தைரியமாகப் பேச முன் வந்துள்ளனர்".

**நேரு மீது அவதூறு**

பிறகு பிரதமர் நேருவைப் பற்றிப் பின்வருமாறு கூறியுள்ளார். "மனிதனின் பலஹீனமான அம்சங்களை அகற்றுவது மிகவும் கஷ்டம். நேரு எப்பொழுதும், குழந்தைப் பருவத்திலிருந்து அலைகளின் மேலேயே மிதந்து வந்துள்ளார். ஆரம்பத்திலிருந்து அவர் ஒரு பெரிய வீரராக்கப்பட்டார். அவர் [illegible]தையும் சொல்லி மக்களிடம் செல்வாக்குப் பெற்றுவிட முடியும். தான் அத்தியாவசியமானவர், தான். இல்லாமல் முடியாது என்ற எண்ணம் அவரிடம் வளர்ந்து தன் கல்வி அறிவு சம்பந்தப்பட்ட விஷயத்தில் அவர் தன்னடக்கம் கொண்டவர். ஆனால் நடைமுறையில் அப்படியில்லை. கடவுளின் மீது அவர் நம்பிக்கை வைத்தால் அவர் மற்றொரு காந்தி ஆகிவிடுவார். இன்றுள்ளவரை பார்த்தால், விஞ்ஞான வழி ஒன்றே வழி என்று அவர் நம்புகிறார்," என்று மொரார்ஜி கூறியுள்ளார்.

### பயங்கர உணவு நிலைமை!

**பார்லிமெண்ட் முன்பு ஆர்ப்பாட்டங்கள்**

புது டெல்லி, செப். 1—

பிரஜா சோஷலிஸ்டுக் கட்சி, ஹிந்து மஸ்தூர் சபா ஆகிய ஸ்தாபனங்களைச் சேர்ந்த 500 பேர் இன்று பாராளு மன்றத்தின் முன்பு ஆர்ப்பாட்டம் செய்தனர். உணவு நிலைமை மோசமாகி வருவதைத் தடுக்க வேண்டுமென்றும் வெகு வேகமாக உயர்ந்துவரும் உணவு விலைகளைக் கட்டுப்படுத்தக் கோரியும் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

இந்த ஆர்ப்பாட்டத்திற்கு டெல்லி ராஜ்ய பி. எஸ். பி.யின் தலைவர் திரு. பிர்முள்டாக் அகமத் தலைமை வகித்தார். தன் கட்சியின் எம். பி. யான திரு. அசோக மேத்தாவிடம் ஒரு விண்ணப்பம் சமர்ப்பித்தார்.

உணவு விலைஉயர்வதால், ஏழை நடுத்தர வர்க்க மக்களைப் பாதிப்பது மட்டுமல்ல, தேசியப் பொருளாதாரமே சீர்குலைக்கப்படும் ஆபத்து ஏற்பட்டுள்ளது, என்று திரு. அசோக மேத்தா ஆர்ப்பாட்டம் செய்தவர்களிடையே பேசுகையில் கூறினார். உணவளிப்பது ஒரு ஜனநாயக ஆட்சியின் முதற் பெரும் கடமை. துரதிருஷ்டவசமாக இன்றைய சர்க்கார் இதை நிறைவேற்றவில்லை என்றார்.

### டாக்காவில் நாகா தலைவர்

**நேரு அறிவிப்பு**

புதுடில்லி, செப். 1—

நாகா கலகத் தலைவர் பிஸ்ஸோ கிழக்கு பாகிஸ்தானின் தலைநகரான டாக்கா நகரில் இருக்கிறாரென்றும், சில நாடுகள் அவருக்கு சாதகமாக இருக்கின்றனவென்றும், ஆனால் அந்த நாடுகளின் பெயர்களை வெளியிடுவது சரியல்லவென்றும் இன்று லோக சபையில் பிரதமர் நேரு ஒரு கேள்விக்கு பதில் அளித்தார்.

## ஜனநாயகத்துக்கு ஆபத்து இல்லையாம்!

### செப்டம்பர் 17லிருந்து குஜராத் பூராவிலுமிருந்து தொண்டர்கள்!

ஆமதாபாத், செப். 1—

செப்டம்பர் 17ந் தேதியுடன் மகாகுஜராத் போராட்டம் துவங்கி ஒருமாதமாகிறது. இதுவரையில் "தியாகிகள் சின்ன" அறப்போரில் அகமதாபாத் நகரிலிருந்து வந்தவர்கள்தான் கலந்து கொண்டார்கள். செப்டம்பர் 17லிருந்து குஜராத் பூராவிலுமிருந்து தொண்டர்கள் வந்து இதில் கலந்துகொள்வர் என்று மகாகுஜராத் ஜனதா பரிஷத் செயலாளர் அறிவித்தார்.

## புதுவையில் கமிஷனரே ஆளமுடியுமாம்!

### உணவு நிலைமை: நேருவின் அறிவுரை

புதுடில்லி, செப். 1—

மோசமாகி வரும் உணவு நிலைமை பற்றி பரிசீலனை செய்ய காங்கிரஸ் பார்லிமெண்டரிக் கட்சி இன்று பிரதமர் நேரு தலைமையில் கூடியது. நேரு அவர்களால் பிரரேபிக்கப்பட்ட தீர்மானம் ஒன்று ஏகமனதாக நிறைவேறியது. உணவு நிலைமையை ஒரு தேசியப் பிரச்சினையாக எல்லா அரசியல் கட்சிகளும் பார்க்க வேண்டுமென்று அத்தீர்மானம் கோருகிறது.

இக் கூட்டத்தில் பேசிய பிரதமர் நேரு காங்கிரஸ்காரர்கள் உணவு விலையைக் குறைக்கப் பாடுபட முன்வரவேண்டுமெனக் கேட்டுக்கொண்டார். உத்தரப் பிரதேசக் காங்கிரஸ் பார்லிமெண்ட் உறுப்பினர் தங்கள் தொகுதிகளுக்குச் சென்று வியாபாரிகளையும், காங்கிரஸ் கமிட்டிகளையும், ஸ்தல அதிகாரிகளையும் சந்தித்து விலைவாசிகளைக் குறைக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். உணவு உற்பத்தியை அதிகரிப்பது உடனடியான அவசர நடவடிக்கை என்றார்.

உத்தரப்பிரதேசத்தின் உணவு விலை உயர்ந்திருப்பதை உடனடியாகத் தடுக்க வேண்டுமென்றார். இவ்வாறு விலை உயர்ந்ததற்குக் காரணமே இல்லை. வெள்ளத்தாலும் பஞ்சத்தாலும் பெரும் சேதம் ஏற்பட்டபோதிலும், வீண் விரயமாவதைத் தவிர்த்தோமானால், மக்களுக்குத் தேவையான போதிய உணவு தேசத்தில் இருக்கிறது என்றார். விலைவாசி உயர்வின் காரணம் ஓரளவு செயற்கை ரீதியானது உணவுச் சூதாட்டத்தால் ஏற்பட்டது என்றார். இதற்குப் போதிய கவனம் செலுத்தி தட்டுப்பாடு ஏற்பட்டுள்ளது என்ற மனோபாவத்தை மாற்ற வேண்டுமென்றார்.

நேருவின் இதே கருத்துக்கள் காங்கிரஸ் கட்சியின் பத்து அம்சத் தீர்மானமாக நிறைவேற்றப்பட்டது.

### ஒத்திவைப்பு தீர்மானத்துக்கு நேருவின் விசித்திர பதில்

புது டில்லி, செப். 1—

பாண்டிச்சேரி அசெம்பிளியில் மெஜாரிட்டி கட்சியார் சமர்ப்பித்த மந்திரி சபை ஜாபிதாவை, பாண்டிச்சேரி பிரதம கமிஷனர் ஏற்க மறுத்ததினால் ஏற்பட்ட நிலைமையை விவாதிப்பதற்காக, இன்றைய சபை நடவடிக்கைகளை ஒத்திவைக்க வேண்டுமென்று இன்றைய லோக சபைக் கூட்டத்தில் கம்யூனிஸ்ட் அங்கத்தினர்கள் வி. பி. நாயரும், கே. டி. கே. தங்கமணியும் ஒத்திவைப்பு பிரரேபணைகள் கொண்டு வந்தார்கள். சபாநாயகர் திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார் அதற்கு அனுமதி தர மறுத்துவிட்டார்.

தனது ஒத்திவைப்பு பிரரேபணை மீது கே. டி. கே. தங்கமணி பேசுகையில் குறிப்பிட்டதாவது: "ஆகஸ்டு 22-ம் தேதி திரு. சந்திரசேகர செட்டியார் 6 பேரடங்கிய மந்திரி சபை ஜாபிதாவைச் சமர்ப்பித்தார். அசெம்பிளியின் 38 அங்கத்தினர்களில் மெஜாரிட்டியினரான 20 பேரின் ஆதரவு அவருக்கு இருக்கிறது. அந்த மந்திரி சபை ஜாபிதாவை பிரதம கமிஷனர் ஏற்க மறுத்ததின் விளைவாக அரசியல் சட்டம் ஆபத்துக்குள்ளாக்கப்பட்டிருக்கிறது.

மேலும், அந்த மெஜாரிட்டியினர், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை அமுல் நடத்துவதாகக் கூறுகிறார்கள். புதுவை ராஜ்யத்தை இந்தியாவுடன் இணைப்பதற்கான அதிகார மாற்றத்தை துரிதமாகக் கொண்டுவரப் பாடுபடுவதாகக் கூறுகிறார்கள். புதுவை ராஜ்ய அரசாங்க விவகாரங்களின் மீதுள்ள குறைந்தபட்ச கண்காணிப்பு கூட நீடிக்க வேண்டுமானால், மந்திரி சபை (கவுன்சில்) ஏற்பட்டே யாகவேண்டும்.

கே.டி.கே.யின் பிரரேபணையை எதிர்த்து நேரு பேசுகையில், "புதுவை ராஜ்யத்தில் சட்ட இயந்திரம் எதுவும் தகர்ந்துவிடவில்லை. தகர்ந்துவிடுமென்ற அபாயமுமில்லை. மந்திரி சபை வெறும் ஆலோசகர் சபைதான். அவ்வளவுதான்! மந்திரி சபை ஜாபிதாவை கமிஷனர் ஏற்க மறுத்ததற்கு எத்தனையோ காரணங்கள் உண்டு.

இந்தியா சுதந்திரம் அடைவதற்கு முன்னாலே, அந்த கவுன்சில் (மந்திரி சபை) அமைப்பு ஏற்பட்டது. அதன்படி 3 பேர்களை எம்.எல்.ஏ. களிலிருந்தே பொறுக்கலாம். மீதி 3 பேரை கமிஷனர் நியமிக்கலாம். அப்படியிருந்தும் கூட 6 பேரையும் அசெம்பிளியே நியமிக்குமாறு கமிஷனர் கேட்டிருக்கிறார்.

"சில விசித்திர நிகழ்ச்சிகள் அங்கு நடைபெற்றுள்ளன. சில அங்கத்தினர்கள் தேகாப்பியாசத்துக்காக ஒருதரப்பிலிருந்து இன்னொருதரப்புக்கு அடிக்கடி நடந்து கொடுத்திருக்கிறார்கள்! அதனால் அங்குள்ள நிலைமைபற்றி பிரதம கமிஷனருக்கு பிடிபடவில்லை" என்றார் நேரு.

**தலைவர் தேர்தல் சரியோ தவறோ...**

நேரு மேலும் பேசுகையில், "அசெம்பிளித் தலைவரைத் தேர்ந்தெடுப்பதிலும் ஒரு விசித்திரம் ஏற்பட்டிருக்கிறது. வயதில் மூத்தவர் என்ற முறையிலே அன்று குபேர் தலைமை வகித்தார். சில காரணங்களை முன்னிட்டு, அவர் சபையை ஒத்திவைத்துவிட்டு, அவரும் அவரைச் சேர்ந்தவர்களும் வெளியேறிவிட்டார்கள். உடனே அங்கே இன்னொரு கூட்டம் நடந்து, அதில் தலைவரைத் தேர்ந்தெடுத்தார்கள்.

"அவர்கள் செய்தது சரியோ தவறோ இச்சமயத்தில் நான் கூற மாட்டேன். ஆனால், சாதாரணமாகச் சொல்லப்போனால், கூட்டத்தின் தலைவர், சரியாகவோ, தப்பாகவோ, கூட்டத்தை ஒத்திவைத்துவிட்டாரேயானால் ஒத்திவைத்தது ஒத்திவைத்ததுதான். அது சட்டப் பிரச்சினை. நமது சட்ட நிபுணர்கள் அதை ஆராய்வார்கள். சரியான நிலைமை எது என்று கூற இப்போது நான் தயாராயில்லை.

"அதுவுமன்றி, பழைய கமிஷனர் போய், புது கமிஷனர் வந்திருக்கிறார். அருவருக்கு எல்லாம் புதிது. அவர் யூனியன் சர்க்காருக்கு எல்லா விஷயங்களையும் அனுப்பியுள்ளார். ஆகவே புதுவையில் சட்டம் தகர்ந்துவிடவில்லை.

இதுபற்றி சட்ட ஆலோசனை கிடைத்த பின், எது சரியோ அதைச் செய்வோம். பல மாதங்கள் வரையும் யாருடைய ஆலோசனையுமில்லாமலேயே பிரதம கமிஷனர் ஆட்சி நடத்தி வந்திருக்கிறார்" என்று பேசினார் பண்டித ஜவர்லால் நேரு.

## நிலையான சமாதானத்திற்கு வழி வகுப்பதாக!

### அணுசக்தி மாநாட்டுக்கு பிரதமர் நேரு வாழ்த்துச் செய்தி

ஜெனிவா, செப். 1—

ஐ. நா. சார்பில் நடைபெறும் "சமாதானப்பணிகளுக்காக அணுசக்தி மாநாடு உலகில் நிலையான சமாதானத்தை நிறுவுவதற்கான அஸ்திவாரத்தை அமைக்கவும், நாடுகளிடையே பரஸ்பரம் நட்புறவை வளர்க்கவும் உறுதுணை செய்ய உதவும் என்று நான் நம்புகிறேன்" என்று பிரதமர் நேரு தமது வாழ்த்துச் செய்தியில் குறிப்பிட்டுள்ளார்.

சென்ற தடவை நடைபெற்ற 'சமாதானப்பணிக்கு அணுசக்தி' மாநாட்டை ஒரு மைல் கல் என்று அவர் கூறினார்.

அந்த மாநாடு முடிந்த பிறகு அதன் விளைவாக அணுசக்தியை ஆக்க வேலைகளுக்குப் பயன்படுத்தும் துறையில் உலகில் மகத்தான முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று அவர் சுட்டிக் காட்டினார்.

இந்த இரண்டாவது மாநாடு அணு சக்தியை சமாதானப் பணிகளுக்குப் பயன்படுத்தும் விஷயத்தில் மேலும் மேலும் சர்வதேச ஒத்துழைப்பு ஏற்பட உதவட்டும்; சகலநாடுகளும் சகல மக்களும் நலமுற்று வாழ நிரந்தர சமாதானம் நிலைபெற உதவட்டும், என்று வாழ்த்தியுள்ளார். (ராய்ட்டர்)

### கேரளத்தில் ஜிர்கான் தொழிற்சாலை

புதுடில்லி, செப். 1—

அணுசக்திக்குப் பயன்படக் கூடிய ஜிர்கான் என்னும் பொருளைத் தோண்டி எடுப்பதற்காக கேரளத்தில் ஒரு தொழிற்சாலை நிறுவப்படும் என்று வி. பி. நாயர் கேட்ட கேள்வி ஒன்றுக்கு இன்று மக்கள் சபையில் பிரதமர் நேரு பதிலளித்தார். (பி.டி.ஐ.)

## காங்கிரஸ் ராஜ்யங்களில்தான் அதிக அராஜகம்!

### ஜனாதிபதி ஆட்சி அவைகளுக்கில்லையா?

### கேரளத்திற்கு மட்டும் ஏன் பாரபட்சம்?

எர்ணாகுளம், செப். 1—

"கேரளத்தில் இன்று ஒரு வகையான இலேசான அராஜகம் நிலவி இருக்கிறது, ஆனால் இதைவிட அதிகமான அராஜகம் ராஜஸ்தானிலும், உத்திரப்பிரதேசத்திலும், மத்திய பிரதேசத்திலும், பீகாரிலும் இருக்கிறதே"

இவ்விதம் அகில இந்திய சோஷலிஸ்ட் கட்சியின் கேரளக் கிளை தலைவருக்கு எழுதியுள்ள ஒரு கடிதத்தில் சோஷலிஸ்ட் தலைவர் டாக்டர் லோகியா குறிப்பிட்டுள்ளார். அவர் தமது கடிதத்தில் மேலும் குறிப்பிட்டுள்ளதாவது:

கேரளத்தில் இன்று இருப்பது போன்ற நிலைமை ஏனைய காங்கிரஸ் ராஜ்யங்களில் இருக்கும் போது, கேரளத்துக்கு மட்டும் ஜனாதிபதி ஆட்சி வேண்டும் என்று கோருவது எனக்கு விளங்கவில்லை. இருக்கும் நிலைமையைப் பார்த்தால் இந்தியா முழுவதுக்குமே ஜனாதிபதி ஆட்சி வேண்டும் போலிருக்கிறது. அப்படி ஜனாதிபதி ஆட்சி வருவது அராஜக நிலையைவிட என்ன குறைவானதோ எனக்குத் தெரியவில்லை என்றார்.

கேரளத்தில் இன்று தெரிந்தோ தெரியாமலோ காங்கிரஸ் கத்தோலிக்கக் கட்சியாகவும், கம்யூனிஸ்ட் ஹிந்து கட்சியாகவும் இருக்கிறதென்றும், கம்யூனிஸ்ட்களை காங்கிரஸ்காரர்களாலோ பி. சோ.க்களாலோ அசைக்க முடியாதென்றும், உழவர்கள் இன்னும் கிறிஸ்தவ, முஸ்லீம்களிலுள்ள தாழ்த்தப்பட்ட மக்கள் ஆகியோர்களிடமிருந்து எழும் ஒரு புதிய புரட்சிகர கட்சியால்தான் கம்யூனிஸ்டுகளை முறியடிக்க முடியுமென்றும் டாக்டர் லோகியா கூறினார்.

### சோவியத் யூனியனுக்கு பாதரக்ஷைகள் ஏற்றுமதி

புதுடில்லி, செப். 1—

சோவியத் யூனியனுக்கு 1957ம் வருடத்தில் 5,76,900 ஜோடி பாதரக்ஷைகள் ஏற்றுமதி செய்யப்பட்டன என்று வர்த்தகத் தொழிலியல் மந்திரி, ஸ்ரீ லால் பகதூர் சாஸ்திரி லோக் சபாவில் இன்று கேள்வி நேரத்தில் தெரிவித்தார். நடைமுதல் வருஷ முதல் ஆறு மாதத்தில்அந்நாட்டுக்கு 2,42,750 ஜோடி பாதரக்ஷைகள் ஏற்றுமதி செய்யப்பட்டன.

## அணுசக்தியின் மூலம் மின்சாரம்

### இந்தியாவின் தேவைகளுக்கு இன்றியமையாததாகும்

### ஜெனிவா மகாநாட்டில் டாக்டர் பாபா விளக்கம்

ஜெனிவா, செப். 1—

இந்தியா தனது மின்சாரத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும் என்றால் நிச்சயமாக அணுசக்தி மூலம் மின்சார உற்பத்தி செய்யும் துறையில் இறங்க வேண்டும் என்று இங்கு பேசிய இந்திய அணுசக்தி கமிஷன் தலைவர் டாக்டர் எச். ஜே. பாபா கூறினார்.

இந்தியாவின் ஜனத்தொகை அதிகரித்து வருவதையும் 2000 வருடத்தில் குறைந்தபட்சம் 60 கோடி மக்கள் இந்தியாவில் வாழ்வார்கள் என்றும் இதற்கேற்ப மின்சார வாய்ப்புகளை அதிகரித்துக்கொள்ள வேண்டும் என்றும் அவர் கூறினார்.

அணுசக்தியை சமாதானப் பணிகளுக்குப் பயன்படுத்துவது குறித்து இங்கு நடைபெறும் சர்வதேச மாநாட்டில் அவர் மேற்கண்டவாறு கூறினார். மாநாட்டில் 67 நாடுகளின் பிரதிநிதிகள் கலந்து கொண்டிருக்கிறார்கள்.

இந்தியாவின் மின்சாரத் தேவை மிகமிக அதிகம் என்றும், சகல மின்சார வாய்ப்புகளையும், நிலக்கரி உற்பத்தி, எண்ணெய் உற்பத்தி இவற்றை ஒட்டுமொத்தமாகப் பார்த்தாலும் போதாது என்றார்.

இந்தியாவில் யுரேனிய எரி பொருள் செய்வதற்கு அவசியமான தோரியம் ஏராளமாகக் கிடைக்கிறது என்று அவர் குறிப்பிட்டார். இந்தியாவின் பல பகுதிகளில் நிலக்கரியிலிருந்து எடுக்கப்படும் மின்சக்தியோடு, அணுசக்தி மின்சாரம் ஏற்கனவே போட்டியிடத் தொடங்கியுள்ளது என்றார். இந்த முறையால் ஏற்படும் வாய்ப்புகள் வருங்கால மின்சாரத்திட்ட அடிப்படையில் கவனம் செலுத்தப்படுகின்றன என்றார்.

நிலக்கரி மூலம் உற்பத்தியாகும் மின்சாரத்தைவிடக் குறைந்த செலவில் இந்தப் புதிய மின்சக்தி உற்பத்தி செய்யமுடியும் என்றார்.

அணுசக்தி மின்சாரத்தால் இந்தியா 10—15 வருடங்களுக்குப் பயனடைதல் வேண்டும் என்றால் அடுத்த ஏழாண்டுகளுக்குள் பத்து லட்சம் கிலோவாட் அணுசக்தி மின்சாரம் உற்பத்தி செய்யப்பட வேண்டும் என்றார். இதைச் செய்தால் நாட்டில் மின்சக்தி உற்பத்தி மேலும் பெருக வழி செய்யும் என்றார். (ராய்ட்டர்)

### ஆயிரம் வீடுகள் சேதமடைந்தன

**பாகிஸ்தான் துப்பாக்கிப் பிரயோகத்தின் விளைவு**

கரீம்கஞ்ச், செப். 1—

ஆகஸ்ட் 6-ம் தேதியிலிருந்து 25-ம் தேதி வரை கர்மா பகுதி, ருசியாரா எல்லை, கரீம்கஞ்ச் ஆகிய இடங்களில் பாகிஸ்தான் படைகள் மொத்தம் 75 ஆயிரம் ரவுண்டுகள் சுட்டார்களென்றும் இதனால் ஆயிரம் வீடுகளுக்கு அதிகமாக சேதம் அடைந்துள்ளன என்றும் அதிகாரப்பூர்வமற்ற செய்திகள் கூறுகின்றன. சேதமடைந்த கட்டிடங்களில் சர்க்கார் அலுவலகங்களும் உள்ளன. (பி.டி.ஐ.)

## ஸ்ரீமதி அமிருத கௌரிக்கு சோவியத் செஞ்சிலுவைப் பதக்கம்

### மாஸ்கோவில் விழா

மாஸ்கோ, செப் 1—

இந்திய செஞ்சிலுவைச் சங்கத்தின் தலைவியாகத் திகழும் ராஜகுமாரி அமிருத கௌரிக்கு சோவியத் செஞ்சிலுவை, செம்பிறைச் சங்கங்களின் மிக உயர்ந்த கௌரவமளிக்கும் விசேஷப் பதக்கங்கள் அளிக்கப்பட்டன.

சோவியத்-இந்திய செஞ்சிலுவைச் சங்கங்களிடையே 'நட்புறவு' கூட்டுறவுகளைப் பேணிப் பணி புரிந்துள்ளதை கவுரவித்தே இந்த மரியாதை செய்யப்படுகிறது.

இந்த விழாவில் நேராகக் கலந்து கொண்ட அமிருத கௌரி, சோவியத் சுகாதாரத் துறை பற்றிய விபரங்களையும் நேரில் கண்டறிந்தார். சோவியத் சுகாதார மந்திரி மேரியா கோவ்ரிகினா, உதவிக் கலாசார மந்திரி செர்ஜி காப்டனோவ் முதலியோருடன் அமிருத கௌரி கலந்து பேசினார்.

இந்த விழாவில் இந்திய தூதர் கே. பி. எஸ். மேனனும் அவரது மனைவியாரும் கலந்துகொண்டார்கள். அமிருத கௌரி விழா முடிந்த பிறகு வார்ஸாவுக்குப் புறப்பட்டார். (ராய்ட்டர்)

### ஐந்து கம்யூனிஸ்ட்கள் கைது

பெஷாவர், ஆக. 30—

144 தடை உத்திரவை மீறியதாக இங்கு ஐந்து கம்யூனிஸ்டுகள் கைது செய்யப்பட்டனர்.

## சம்பளங்களைக் கட்டுப்படுத்த [illegible]தித் திட்டம்

### ஏற்றுமதி அதிகரிக்க சர்க்காரின் புதிய முயற்சி

(டிரங்போன் மூலம்)

மதுரை, செப். 2—

மத்திய சர்க்கார் இன்றுள்ள பெரும்பான்மைத் தொழிலாளர்களின் சம்பளங்களை இன்றுள்ள மட்டத்திலேயே கட்டுப்படுத்த (Wage reeze) சீக்கிரமே நடவடிக்கைஎடுக்கப் போவதாகத் தெரியவருகிறது. இத்தகைய கட்டுப்படுத்தல் நடவடிக்கை எடுக்கு முன்பு, இன்றுள்ள சம்பள விகிதங்களைப் பற்றி ஒரு சென்சஸ் எடுத்துவருகிறார்களாம்.

இத்தகைய கட்டு ஏற்றுமதி வர்த்தகம்பெருவதற்காககொண்டு வரப்படுகிறதாம். விலைவாசிகள் உள்நாட்டில் உயராதிருந்தால் தான்ஏற்றுமதிவியாபாரம்வளரும் என்றும், விலைவாசிகள் உள்நாட்டில் உயராதிருக்க சம்பளங்களைக் கட்டுப்படுத்துவதே சரியான மார்க்கமென்றும் மத்திய சர்க்கார் கருதுவதாலேயே இந்த நடவடிக்கை எடுக்கப் போகிறார்களாம்.

இத்தகைய சம்பளக் கட்டுப்பாடுத் திட்டம் அமுலுக்கு வந்தால் இன்றுள்ள சம்பள நிலையிலிருந்து தொழிலாளர்கள் நிலை உயராமல் தடுக்கப்படும் என்பது தெளிவு.

### டக்கர்கிராம் இன்னும் பாகிஸ்தான் வசம்!

ஷில்லாங், செப். 1—

அசாம் எல்லையில் டக்கர்கிராம் என்னும் கிராமம்இன்னும் பாகிஸ்தான் படைகள் வசமே இருக்கிறது என்றும் இந்த விஷயம் இந்தியா பாகிஸ்தான் காரியதரிசிகள் மட்டத்தில் தற்போது நடைபெற்றுவரும் பேச்சுவார்த்தைகளின்போது பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படுமென்றும் அசாம் பிரதேச காங்கிரஸ் நிர்வாகக் கமிட்டிக் கூட்டத்தில் கூறினார். (பி. டி. ஐ.)

## கேரளத்தில் காகித மில்

### தொழிலதிபர் தாப்பர் நடத்த முன்வருகிறார்

**அரசியல் குழப்பம் பற்றி அக்கறையில்லை என்கிறார்**

ஜகத்ரி, ஆக. 30—

பிரபல தொழிலதிபரான கரண் சந்த் தாப்பர் கேரளத்தில் தமது நிறுவனத்தின் சார்பில் பல தொழில்களை நடத்த உத்தேசித்திருப்பதாகக் கூறினார். இது பற்றி கேரள சர்க்காருடன் பேச்சுவார்த்தைகள் நடத்தி வருவதாயும் பிர்லாவுக்கு அளிப்பதாகக் கூறிய அதே வசதிகளைத் தமக்கும் சர்க்கார் அளிக்க முன் வந்துள்ளதாயும் கூறினார்.

கேரள ராஜ்யத்தில் காகிதத் தொழிற்சாலை நிறுவ வசதியான மூலப் பொருள்கள் ஏராளமாகக் கிடைப்பதாயும் அங்கு ஒருகாகித மில் நிறுவத் தாம் உத்தேசித்திருப்பதாயும் கூறினார்.

கேரளத்தில் அராஜக நிலை நிலவுவதுப்பற்றியும் சமீப காலத்திய குழப்பங்கள் பற்றியும் அவரிடம் கேட்டபோது ராஜ்யத்திலுள்ள உள் அரசியல் விவகாரங்கள் பற்றி தமக்குக் கவலை இல்லை என்றும், தொழிலைப் பொறுத்த வரையில் மட்டுமே தான் அக்கறை கொண்டிருப்பதாகவும் அவர் கூறினார்.

தொழிலாளர் அதிருப்தியால் தகராறுகள் எங்கும்தான் இருக்கின்றன என்று கூறிய அவர் கேரள சர்க்கார் தொழில் அமைதியை நிலைநாட்ட உறுதியளித்திருப்பதாயும், சம்பளக் கட்டுக் கோப்புப் பற்றிச் சில கோட்பாடுகளை வரையறுத்துள்ளதாயும் அவர் கூறினார்.

—ஹிந்துஸ்தான் டைம்ஸ்

## கடம் அணைக்கட்டு தகர்ந்தது

### வெள்ளத்தால் மாபெரும் சேதம்

ஹைதாராபாத், செப். 1—

இதுவரை கண்டும் கேட்டுமிராத வெள்ளம்! அடிலாபாத் ஜில்லாவிலுள்ள கடம் அணைக்கட்டு உடைந்துவிட்டது. அதன் முக்கிய பகுதி வெள்ளத்தோடு வெள்ளமாகப் போய்விட்டது.

ஆந்திர முதலமைச்சர் திரு. சஞ்சீவி ரெட்டி இந்த இடத்திற்கு வந்துள்ளார். போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரலும் ரிசர்வ் போலீசுடன் வந்துள்ளார்.

பாண்டவப்பூர் நாராயண்பள்ளி மெரிகுடா ஆகிய கிராமங்களில் பல வீடுகள் வெள்ளத்தால் அடித்துக்கொண்டு போகப்பட்டன.

நிலைமை இப்பொழுது சீர்பட்டு வருவதாகவும், ஆற்று தண்ணீர் மட்டம் குறைந்து வருவதாகவும் கூறப்படுகிறது.

ஜனசக்தி

சென்னை 2-9-1958

# தமிழ்-போதனை மொழி

31-8-58 அன்று சைதாப்பேட்டை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில், தமிழ்க் கலைக் கழகத்தின் ஆண்டிறுதிப் பேரவைக் கூட்டம் நடந்திருக்கிறது. அதில் பல தமிழ்ப் பேரறிஞர்கள் பேசியிருக்கிறார்கள்.

தமிழ்மொழி பற்றிய ஆராய்ச்சியை இன்னும் தீவிரப்படுத்த வேண்டும். நவீன வெளிநாட்டுச் சொற்களுக்கு, தமிழ்ச் சொற்களையே உபயோகப்படுத்த வேண்டும். கல்லூரிகளில் தமிழை போதனை மொழியாக்கும் எல்லா முயற்சிகளிலும் உடனடியாக ஈடுபட வேண்டும்.

இத்தகைய நல்ல கருத்துக்களைப் பேச்சாளர்கள் வலியுறுத்தியிருக்கிறார்கள்.

தமிழைக் "கன்னித் தமிழ்" என்று நெடுகலும் போற்றி வந்திருக்கிறார்கள் தமிழர்கள் இதன் பொருள் என்ன? தமிழ் கிழடுதட்ட இடங்கொடாமல் வளர்ந்து வந்துள்ள மொழி என்பது தான். கிழடுதட்டிய சொற்களைக் களைந்தெறிவது, சொற்களில் புதிய கருத்துக்களைத் தயங்காது திணிப்பது, தேவைக்குத் தக்கபடி புதிய சொற்களை உருவாக்குவது, பிறமொழிச் சொற்களைத் தவிர்க்க முடியாவிட்டால், தமிழுக்கு ஏற்ப அப்படியோ அல்லது தன்மயப்படுத்தியோ ஏற்பது—ஆகிய முறைகளைக் கடைப்பிடித்து, தமிழ் "என்றுமுள தென்றமிழாக" வளர்ந்து வந்திருக்கிறது.

உலகப் பழம் பெரும் மொழிகளில் ஒன்றெனினும் தமிழ், இறந்து மறைந்துவிடவும் இல்லை; இருந்தபடியிருக்கவும் இல்லை. தகுதி வாய்ந்த நவீன மொழியாய் விளங்க, அது கடும்போர் நடத்திக் கொண்டிருக்கிறது. "வானம் அறிந்த தனைத்தும் அறிந்து வளர்மொழி" என்ற புலவனின் கூற்று பொய்யா மொழியாகும் வண்ணம் முனைந்து முன்னேறிக் கொண்டிருக்கிறது.

இன்னும் சில ஆண்டுகளில், கல்லூரிகளிலெல்லாம், தமிழகத்தில் தமிழ், பயிற்சி மொழியாக வந்து விடப் போவது திண்ணம்.

தமிழனுக்கு எதையும் அறிய முடியும் என்றால், அறிந்தது எதையும் தமிழில் சொல்ல முடியும் என்ற நியாயமான நம்பிக்கை தமிழனின் உள்ளத்தை ஆட்கொள்ள வேண்டும். பிற மொழிகளை, அவற்றின் சாதனைகளை முறையாகப் போற்றுவதும், தன் வளர்ச்சிக்கும் தமிழ் வளர்ச்சிக்கும் பயன் படுத்துவதும் வேறு; பிறமொழிகளைவிடத் தமிழ் தாழ்ந்தது, எண்ணங்களை வெளியிட ஆற்றல் அற்றது என்ற எண்ணமும் முடிவும் வேறு.

ஆங்கிலம் சர்வ வல்லமை வாய்ந்தது என்ற எண்ணமும், ஆரியம் (வடமொழி) உயர்ந்தது, 'தெய்வத் தன்மை' வாய்ந்தது என்ற எண்ணமும் தமிழுக்கு எலும்புருக்கி நோய் என்பதை உணர வேண்டும்.

"சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே" என்ற தமிழ்ப் பெரு மகன், ஆங்கிலத்தையோ, ஆரியத்தையோ வெறுக்கவில்லை. மாறாக,

"சென்றிடுவீர் எட்டுத் திக்கும்— கலைச்
செல்வங்கள் யாவும்
கொணர்ந்திங்கு சேர்ப்பீர்!"

என்று பன்மொழிப்புலவர்களுக்கு அறைகூவல் விடுக்கிறான்.

தமிழனிடம் தனி நம்பிக்கையில்லாதிருந்தாலும், ஏனைய மொழிகளின் பால் எரிச்சல் கொண்டிருந்தாலும் வள்ளுவனும், கம்பனும், பாரதியும் என்றும் கலங்கரை விளக்காய், தமிழுக்கு நேர் நிகரற்ற பணி புரிந்திருக்க முடியாது.

இன்றைய உலகத்தை விஞ்ஞானமும், தொழில் நுட்பமும் பல்வேறு கலைகளும் ஆட்சி செலுத்துகின்றன. இந்தத் துறைகளிலெல்லாம் தமிழ், கொடி கட்டிப் பறக்கச் செய்ய வேண்டும். எனவே நம் காலக் கடமை மிகப் பெரிது.

இன்றைய உலகில் வளரும் மொழிகளான ஆங்கில, பிரெஞ்சு, ஜெர்மானிய, ரஷ்ய, சீன மொழிகளும், பாரதத்தில் வங்கம் போன்ற மொழிகளும் முன்னேறிச் செல்லும் திசை வழி, தமிழின் முன்னேற்றத்திற்குப் பேருதவி செய்யக்கூடும்.

தமிழ், கல்லூரியில் எத்துறையிலும் கொலுவீற்றிருந்து, கணிசமான சாதனையும் வெற்றியும் காணும் நாளே, தமிழன் நவீன வாழ்வில் வெற்றி காணும் நன்னாளாகும். நமது தமிழ்ப் பேரறிஞர்களும், அறிவு-கலைத் துறைகளில் புதிய தெம்போடு வளமும் வலுவும் பெற்று வரும் இளைஞர்களும் குறைந்தது பத்து ஆண்டுகள் மூச்சைப் பிடித்து முனைவார்களானால், நவீன காலம் பெருமைப்படுத்தத் தக்கவிதத்தில், தமிழை உயர்ந்த, சிறந்த இடத்தில் தூக்கி வைக்க முடியும்.

தனித் தமிழ் வெறிக்கும், வடமொழிப் பித்தத்திற்கும், ஆங்கில மோகத்திற்கும் முதலிடம் கொடாமல், எல்லாத் துறையிலும் தமிழ் வளர்ச்சி-குறிப்பாக விஞ்ஞான, தொழில் நுட்பத் துறைகளில் தமிழ் வளர்ச்சி-என்ற குறிக்கோளுக்கு முதலிடம் கொடுக்க அறிஞர்களும், இளைஞர்களும் முன்வர வேண்டும். மத்திய, ராஜ்ய சர்க்கார்கள் தமிழைக் காலதாமதமின்றிக் கல்லூரி மொழியாக்கத் தனிக் கவனம் செலுத்த வேண்டும். தங்கு தடையற்ற பொருளாதார உதவியோடு இதர எல்லா உதவிகளும் புரிய முன்வர வேண்டும்.

தமிழ்க் கலைக் கழகத்தைப் போன்ற மக்கள் நிறுவனங்களுக்கு இத்துறையிலுள்ள தனிப் பங்கைப் பற்றிக் கூறுவது மிகை.

## நிறவெறி

பர்மிங் ஹாமிலுள்ள ஒரு நடன சாலையில்இந்திய மாணவர் ஒருவர் கறுப்பர் என்ற காரணத்தால் அனுமதிக்கப்படவில்லை. இதிலிருந்துதான் நிறவெறியாட்டக் கலவரங்கள் தொடங்கியுள்ளன. இந்த நிகழ்ச்சி குறித்து பூபேஷ் குப்தா ராஜ்ய சபையில் கேள்வி கேட்டார். அவனுவசியமாகக் கலவரமடையக் கூடாதென்று நேரு பதில் அளித்தார்.

ஜனநாயகத்திற்குத் தாய் வீடு பிரிட்டன் என்று 'பழைய ரக' ஜனநாயகவாதிகள் பெருமையாகப் பீத்திக் கொள்வதை இன்றும் கேட்கலாம். அத்தகைய பிரிட்டனின் தலைநகரான லண்டனில்தான், இந்திய மாணவனுக்கு நடனசாலையில் அனுமதி மறுப்பு, அதிலிருந்து குட்டிக்கலகம், போலீஸ் தலையீடு எல்லாம் நடந்திருக்கிறது.

இதை அறிந்த பிரிட்டிஷ் தொழிற்கட்சியைச் சேர்ந்த இரண்டு பாராளுமன்ற அங்கத்தினர்கள் கூட பிரிட்டனுள் கறுப்பர்களை அனுமதிப்பதைத் தடுக்கவேண்டுமென்று கொதித்துக் குதித்திருக்கிறார்கள்.

இவர்களுடைய இந்த நிறவெறியை, பிரிட்டிஷ் கம்யூனிஸ்ட் கட்சி அழுத்தமாகக் கண்டித்திருக்கிறது.

பிரிட்டனில், 200 ஆளுக்கு ஒரு ஆள்தான் வேறு நிறத்து ஆள். ஆனால் ஆங்கிலேயர் 100-க்கு 4-பேர் வேலைதேடி பிரிட்டனுக்கு வெளியில் சாம்ராஜ்ய முழுவதும் செல்கிறார்கள். காலனி நாட்டுத் தொழிலாளிகள், தங்கள் நாட்டை விரும்பாமல் பிரிட்டனில் குடியேறவில்லை. ஏகாதிபத்யம் அவர்கள் தலையில் பட்டினிக் கொடுமையை சுமத்திவிட்டதால் பிரிட்டனுக்கு வரவேண்டியதாயிற்று.

இப்படி நியாயம் கூறி, பிரிட்டிஷாரின் நிறவெறியைக் கண்டித்திருக்கிறது பிரிட்டிஷ் கம்யூனிஸ்ட் கட்சி.

ஆனால் கறுப்பர்கள் பிரிட்டனுக்குச் செல்வதால் தான், பிரிட்டனில் வீட்டு நெருக்கடியும் வேலையில்லாத் திண்டாட்டமும் பெருகுகிறது என்று பேசிப்பேசி அதன் எதிரொலியாக நிறத்துவேஷத்திற்கு அங்குள்ள பாசிஸ்டுகளும், பிற்போக்காளர்களும் தூபதீபம் காட்டுகிறார்கள்; உடுக்கடிக்கிறார்கள்.

தொழிலாளி வர்க்கமும் சர்வசாதாரண பொது மக்களும் நிறப்பிரிவினைக்குக் கிஞ்சிற்றும் இடம் கொடுக்கக்கூடாது. நிறவெறி உலக ஜனநாயக ஒற்றுமையை உடைத்துத் தகர்த்தெறியும் கொடிய வெடிமருந்து.

## பார்மோஸாவில் ஆயிரக்கணக்கான மக்கள் கைது

### அமெரிக்க எதிர்ப்புணர்ச்சி அதிகமாகிறது

ஹாங்காங், ஆக. 30—

சீன தேசிய ராணுவத்தினரும் போலீஸாரும் நேற்று முழுவதும் பார்மோஸாவில் ஏராளமானவர்களைக் கைது செய்வதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தனர் என்று புதிய சீனத்தின் செய்தி அறிவிக்கிறது.

தைபேயிலுள்ள போலீஸ் படை, தைபே நகரில் மட்டும், சந்தேகத்தின் பேரில் சுமார் 700 பேரைக் கைது செய்திருக்கிறது. ஒவ்வொரு வீடும் சோதனையிடப்படுவதாகவும் தெருக்களிலெல்லாம் காவல்படையினரின் கண்காணிப்பில் இருப்பதாகவும் தெரிகிறது.

அமெரிக்க, தேசிய சீன விமானப் படையினர் கூட்டாக நடத்திய ஒத்திகையின்போது பார்மோஸாவிலுள்ள மக்களை ஒரே பீதி வெள்ளத்தில் ஆழ்த்தியிருப்பதாக அந்தச் செய்தி அறிக்கை மேலும் கூறுகிறது.

அண்மையில் புதிதாக இறக்கப்பட்ட அமெரிக்கப் படையினரின் ஆக்கிரமிப்பு நடவடிக்கைகள், பார்மோஸா மக்களிடையேயே அமெரிக்க எதிர்ப்புணர்ச்சியை அதிகமாக்கியிருப்பதாகவும் அந்த அறிக்கை குறிப்பிடுகிறது.

## இந்தியாவில் கிழக்கு ஜெர்மன் தூதுக் குழு

### தொழிற்சாலைகள் நிறுவ உதவி

### இந்தியப் பொருள்களை வாங்கத் திட்டம்

புதுடெல்லி, ஆக. 30—

இந்தியாவில் சிறு தொழிற்சாலைகளை நிறுவுவதற்குரிய வாய்ப்புக்களை பற்றிய, இதற்காக தேவைப்படும் உதவியை கிழக்கு ஜெர்மனி செய்ய முடியும் என்பதை கண்டறிவதற்காக கிழக்கு ஜெர்மனி ஜனநாயகக் குடியரசின் ஒரு தூது கோஷ்டி இங்கு வந்துள்ளது.

இப்போது இந்த தூது கோஷ்டி தலைவர்களுடன் சர்க்கார் தனியார் தொழில் அதிபர் பிரதிநிதிகளும் சந்தித்து பேச்சு வார்த்தைகளை நடத்தி வருகிறது. இந்திய மார்க்கெட்டின் நிலைமை பற்றி நன்கு புரிந்துகொண்டு உருப்படியான பல யோசனைகளையும் முன்வைத்திருக்கிறது.

சிறு தொழில் போர்டு பிரதிநிதிகளுடனும் தூது கோஷ்டியினர் கலந்து பேசியுள்ளனர். ஏற்கெனவே பல தனியார் தொழிலதிபர்களுடனும், பூர்வாங்க உடன்பாட்டிற்கு வந்து, சிறிய [illegible] தொழிற்சாலையில் யந்திரப் பகுதிகளைச் செய்யும் பட்டறைகள், மர உலோகச் சாமான் செய்யும் யந்திரங்கள் இவற்றை சப்ளை செய்வதற்காக ஏற்பாடுகளைச் செய்திருக்கிறது. இந்தத் தகவலை தூதுகோஷ்டியில் வந்துள்ள எஞ்சினியர் உறுப்பினர் டாக்டர் ஷ்மில் வெளியிட்டார்.

இந்தத் தூது கோஷ்டி சென்னை, பம்பாய், பங்களூர், ஹைதராபாத், கல்கத்தா, முதலிய இடங்களுக்கு விஜயம் செய்யும். இந்த இடங்களிலும் சிறு தொழிலதிபர்களைச் சந்தித்துத் தொழில் வாய்ப்புகளைப் பற்றி விவாதிப்பார்கள்.

உடனடியாக நிறுவுவதற்கு வசதியுற்ற தொழில்களைப் பற்றி மட்டுமன்றி, இன்னும் மூன்று நான்கு வருடங்களில் நிறுவக் கூடிய தொழில்களைப் பற்றியும் சர்ச்சை நடத்துவார்கள்,

#### இந்தியப் பொருள்களை வாங்கும் திட்டம்

ஜெர்மனியிலிருந்து இறக்குமதி செய்யப்படும் யந்திரங்களுக்கு உரிய பணம் இந்திய போலீஸ் கொடுக்கலாம். இவ்வாறு கிடைக்கும் பணத்தைக் கொண்டு இந்தியப் பண்டங்களான தேயிலை, காப்பி, சணல் பொருள்கள், மைக்கா, மிளகு, முந்திரிக் கொட்டை போன்ற பொருள்களை ஜெர்மனி வாங்கும்.

தொழிற்சாலைகளை நிறுவி ஆரம்ப கட்டங்களில் நடத்த தொழில் நுட்ப உதவியளித்தும், இந்தியாவிலுள்ள தொழில் நுட்ப கலைஞர்களுக்கு விசேஷப் பயிற்சியளிக்கவும்.ஜெர்மனி ஆயத்தமாக இருக்கிறது. தூதுகோஷ்டியின் ஆலோசனைகளுக்கு நல்ல வரவேற்பு கிடைத்துள்ளது.

ஐ. பி. ஏ.

## ஜனதிபதி பிரசாத்

### செ. 26ல் ஜப்பான் விஜயம்

டோக்யோ, செப். 1—

தங்களுடைய அழைப்பின் பேரில் இம்மாத இறுதியில் ஜப்பானுக்கு விஜயம் செய்யும் இந்திய ஜனதிபதி ராஜேந்திர பிரசாதை ராஜாங்க விருந்தினராகப் பராமரிப்ப தென்று ஜப்பானிய சர்க்கார் முடிவு செய்துள்ளது. செ, 26ல் டோக்கியோ வந்து சேரும் இந்திய ஜனதிபதி ஜப்பானில் 9 நாள் இருப்பார்

(ராய்ட்டர்)

## கேரள வெள்ள நிவாரணத்திற்கு

### ஆந்திர கவர்னர் ரூ. 1000 நன்கொடை

திருவனந்தபுரம், செப். 1—

ஆந்திரப் பிரதேச கவர்னர் திரு. பீமசேன சச்சார், கேரள கவர்னருக்கு எழுதியுள்ள ஒரு கடிதத்தில், கேரளத்தில் அண்மையில் ஏற்பட்ட வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்குத் தன் அனுதாபத்தைத் தெரிவிக்கும்படி வேண்டிக்கொண்டுள்ளார்.

மேலும் கேரள முதல் மந்திரியின் வெள்ள நிவாரண நிதிக்கு ரூ. 1000ம் நன்கொடையும் வழங்கியுள்ளார். (பி.டி.ஐ.)

## சர்வதேச மார்க்ஸிய சஞ்சிகை வெளியாகி விட்டது

### 19 மொழிகளில் பிரசுரம்

லண்டன், செப். 1—

உலக கம்யூனிஸ்ட்—தொழிலாளர் கட்சிகள் பலவற்றின் கூட்டு முயற்சியால் பிரசுரமாகியுள்ள 'உலக மார்க்ஸியசஞ்சிகை'யின் ஆங்கிலப் பதிப்பு இங்கு விற்பனையாகி வருகிறது. உலகத்திலுள்ள 19 பிரதான மொழிகளில் இந்த சஞ்சிகை பிரசுரிக்கப்பட்டுள்ளன.

முதலாவது இதழில் முக்கியமான பல கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. பொருளாதார நெருக்கடியும் தொழிலாளி வர்க்கமும்என்றமகுடத்தில்நீண்டதோர் கட்டுரை பிரசுரமாகியுள்ளது. பல்வேறு நாடுகளின் கம்யூனிஸ்ட் கட்சிகளின்இயக்கங்கள் வேலைகள் பற்றியும் கட்டுரைகள் உள்ளன.

சோஷலிஸமும் அரசாங்கமும் என்ற தலைப்பில் எழுதப்பெற்றுள்ள கட்டுரை சரியான மார்க்சியக் கருத்தை விளக்கி, இந்தப் பிரச்சினையினால் எழுந்துள்ள திருத்தல் வாதங்களை விமர்சித்து இருக்கிறது.

சீனாவில் வெற்றிகரமாக நடக்கும் சோஷலிஸ்ட் புனரமைப்பு வேலைகள் பற்றியும், மத்திய கிழக்கில் அமெரிக்காவின் காலனியாதிக்கம் குறித்தும் பிரான்ஸில் பாசிஸ அபாயம், ஜெர்மனியின் ராணுவமயப் போக்கு இவைகளைப் பற்றி மட்டுமின்றி நிகழ்காலப் பிரச்சினைகளை பலவற்றையும் குறித்துக் கட்டுரைகள் வெளியிடப்பட்டுள்ளன.

பொருளாதார நெருக்கடி பற்றிய கட்டுரையில், பல்வேறு நாடுகளில் உள்ள நிலைமை விளக்கப்பட்டிருக்கிறது. யுத்தப் பிற்கால பொருளாதாரச் சுழற்சியில் சோவியத் பொருளாதார நிபுணர்களின் பங்கு விளக்கப்பட்டிருக்கிறது.

ஜப்பானிய தத்துவ மேதை ஒருவர் எழுதியுள்ள "சுதந்திரம், உண்மையும் போலியும்" என்ற நூல் விமர்சனம் செய்யப்பட்டுள்ளது. டெயிலி ஓர்க்கர்.

## தேசிய சேமிப்புத் திட்டம் துறைமுகத் தொழிலாளரின் பங்கு

### ஏ. எஸ். கே. அய்யங்கார் பேச்சு

சென்னை ஆக. 30—

தேசிய சேமிப்புப் பத்திரத் திட்ட அதிகாரிகளின் சிறந்த ஒத்துழைப்புடன் சென்னைத் துறைமுகத் தொழிலாளர்கூட்டுறவுப் பண்டகசாலையின் சார்பில் கூட்டமொன்று நேற்று மாலை நடைபெற்றது.

துறைமுகத் தொழிலாளர்கள் தங்கள் குடும்பத்துடன் பெருந் திரளாக வந்திருந்த அந்தக் கூட்டத்திற்கு ஏ. எஸ். கே. அய்யங்கார் தலைமை வகித்துப் பேசுகையில், தேசிய சேமிப்புப் பத்திரத் திட்டத்தின் உயர்ந்த நோக்கங்களை விளக்கினார். தொழிலாளருடைய குழந்தைகளின் எதிர்கால நலன்களுக்கு இத்திட்டம் பாதுகாப்பு அளிப்பதுடன் நாட்டின் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் வெற்றிக்கும் உதவும் என்பதை அவர் விளக்கினார்.

தேசிய சேமிப்புத் திட்டப் பிராந்திய அதிகாரி கே. என். சீனிவாசன், துணை அதிகாரி எஸ். சீனிவாசன், முதலியோர் திட்டத்தின் சிறப்புக்களை விளக்கியதோடு தொழிலாளர்கள் இத்திட்டத்தால் பெறும் நன்மைகளையும் வற்புறுத்திப் பேசினர்.

## கிருஷ்ணமேனன் வீட்டில் வாலிபர் காங்கிரஸ் விவாத அரங்கு

கோழிக்கோடு, ஆக. 31—

மத்திய சர்க்கார் பாதுகாப்பு மந்திரி திரு. வி. கே. கிருஷ்ண மேனன் வீட்டில் இன்று காலை அகில கேரள வாலிபர் காங்கிரசின் ஒரு விவாத அரங்கு ஆரம்பமாயிற்று.

வாலிபர் ஸ்தாபனங்களின் பல்வேறு அம்சங்களும், தேசிய இயக்கத்திற்கு தீவிரமான முறையில் உதவிசெய்வதற்கு எடுத்துக் கொள்ளவேண்டிய நடவடிக்கைகள் பற்றியும் இந்த விவாத அரங்கில் விவாதிக்கப்படுமாம்.

இந்த விவாத அரங்கில் வி. கே. கிருஷ்ணமேனன்,தாமஸ் கோட்டுகாபள்ளி (எம். பி.) சி. கே. கோவிந்த நாயர் (கேரள பிரதேசக் காங்கிரசின் முன்னாள் தலைவர்), பி.பி. உம்மர்கோயா, கேரள சட்டசபை காங்கிரஸ் கட்சியின் உப தலைவர் கே கோபாலன் ஆகியோர் பங்கெடுத்துக் கொள்வார்களாம்.

## கம்யூனிஸ்ட் கட்சி பொதுக்கூட்டம்

காஞ்சீபுரம், ஆக. 30—

28—8—58-ந்தேதி வியாழன் காஞ்சீபுரம் அடுத்த ஐயன் பேட்டையில் மாலை 6 மணிக்கு தோழர் சம்பந்தம் தலைமையில் கம்யூனிஸ்ட் கட்சி பொதுக்கூட்டம் நடைபெற்றது.

தோழர்கள் வி. சுப்ரமணியம், ஜி. விஸ்வநாதன், சொக்கலிங்கம், கே. எஸ். பார்த்தசாரதி (ஜி. க. செயலாளர்) கம்யூனிஸ்ட் கட்சியின் கொள்கைகளை விளக்கியும், கேரள காங்கிரஸ்காரர்களின் முறையற்ற போக்கைக் கண்டித்தும் பேசினர்.

## ஜெய்ப்பூரில் 8 பேர் கைது

ஜெய்ப்பூர், செப். 1—

ராஜஸ்தான் ஹைகோர்ட்டின் ஒரு பகுதி ஜெய்ப்பூரிலேயேஇருக்க வேண்டும் என்பதற்காக வழக்கறிஞர்களால் துவக்கப்பட்ட போராட்டம் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இன்று அக் கிளர்ச்சிக்கு ஆதரவாக144 தடையுத்திரவை மீறி ஊர்வலமாகச் செல்ல முயன்ற 8 பேர் கைது செய்யப்பட்டனர்.

## சென்னை நகர சபை

### இன்றுள்ள நிலையும் வரவிருக்கும் மாற்றமும்

சென்னை, ஆக. 31—

சென்னை நகரம் இன்று 50 வட்டங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. வட்டத்திற்கு ஒரு உறுப்பினர் வீதம் 50 பேர் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். 5 வட்டங்களிலிருந்து மட்டும் ஷெட்யூல்ட் வகுப்பினர் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். 4 வட்டங்களில் பெண்களும் தொழிலாளர் பகுதியிலிருந்து 4 தொழிலாளர்களும் வர்த்தக நிறுவனங்களிலிருந்து 8 பேர்களும், துறைமுக டிரஸ்டிலிருந்து ஒருவரும் சென்னைப்பல்கலைக்கழகத்திலிருந்துஒருவரும் பொது சுகாதார ஆணையாளர், நகர அபிவிருத்தி டிரஸ்டி தலைவர் ஆகிய இருவரும் ஆல்டர்மென்கள் ஐவரும் அடங்கியதாக இதுவரை சென்னை நகர சபை இருக்கிறது.

புதிய சட்டத்தின்படி சென்னை நகர சபை அமைப்பில் ஏற்படவிருக்கும் மாறுதல்களாவன :

#### 100க்கு மேற்பட்ட உறுப்பினர்

100 வட்டங்களுக்கு 100 உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுவர். 10வட்டங்களைகொண்ட கவுன்சில் கூட்டத்தில் 10 வட்டங்களிலிருந்து பெண் உறுப்பினரும், ஷெட்யூல்ட் வகுப்பிலிருந்து ஒருவர் தேர்ந்தெடுக்கப்படாமலிருந்தால் இன்னொரு பெண் உறுப்பினரும் தேர்ந்தெடுக்கப்படுவர். இந்த வகையிலும் தனி நிறுவனங்களிலிருந்தும் அதிகபட்சம் 20 உறுப்பினர்களிருப்பர் என்று தெரிகிறது. பொது சுகாதார இயக்குநர், சுகாதார இஞ்சினியர், நகர அபிவிருத்தி டிரஸ்ட் தலைவர் முதலியவர் சிறப்பு உறுப்பினர்களாக இருப்பர். ஆக அதிகபட்சம் 123 பேர்களைக் கொண்டதாக நகரசபை இருக்கும். இதன் குறைந்த பட்ச உறுப்பினர் எண்ணிக்கை 103 ஆகும்.

#### பதவிக்காலம் 5 ஆண்டு

உறுப்பினர்கள் பதவிக்காலம் மூன்றாண்டுகளாக இப்பொழுது இருக்கிறது. இனிமேல் ஐந்து ஆண்டுகளாக இருக்கும்.

மேற்கண்ட திருத்தங்களை அமுல் நடத்த 1919-ம் ஆண்டு சென்னை நகரசபைச் சட்டத்தில் தேவையான மாறுதல்கள் செய்யப்படும்.

இதுபற்றிய அரசாங்க அறிவிப்பு நமது இதழில் ஏற்கெனவே வெளியிடப் பட்டிருக்கிறது.

(ந. நி.)

## மைசூர் சட்டசபையைக் கூட்டுக!

### எதிர்க்கட்சியினர் கோரிக்கை

பங்களூர், செப். 1—

மைசூர் ராஜ்யத்தில் உணவு நிலைமை மோசமாகி விட்டதால் இதைப்பற்றி விவாதிக்க உடனடியாக சட்டசபையைக் கூட்ட வேண்டுமென்று மைசூர் எதிர்க்கட்சித் தலைவர்கள் திரு. கே. கெஞ்சப்பா, பி. கே. புட்டுராமையா ஆகிய 12 பேர் முதலமைச்சர் பி. டி. ஜெட்டியைச் சந்தித்து வற்புறுத்தினர்.

அக். 24ந் தேதிதான் சட்டசபையைக் கூட்ட முடியுமென்று முன்னர் முதலமைச்சர் அறிவித்துள்ளார்.

## ஆசிரியருக்கு கடிதங்கள்

### "புதுமைப் பெண்"ணுக்கு வாழ்த்து

ஐயா,

ஜனசக்தி பெரிய அளவில் வளரத் தொடங்கிய சில நாட்களுக்குள்ளேயே நாட்டிலே "புதுமைப் பெண்ணை"ப் படைக்கத் தொடங்கிவிட்டது; பாரதி கண்ட கனவை, காணவிரும்பிய சீமுதாயத்தை உருவாக்கத் தொடங்கி விட்டது.

மனித குலத்தின் ஒரு பங்காளி தான் பெண்ணுலகம். ஆனாலும் ஆயிரமாயிரமாண்டுகளாகப் பல விதத் தடைகளால் அடிமையுற்று, பாதை தவறிச் சென்று, தன்னுரிமையை இழந்து துன்புற்றுச் சீரழிந்தது.

பெண்குலம் சுகமான சக வாழ்வு பெற்றுச் சிறக்கவேண்டுமெனும் நோக்கத்துடன் தாங்கள் எழுதத் தொடங்கியிருக்கும் 'புதுமைப் பெண்'ணை நெஞ்சார வாழ்த்துகிறேன். வரவேற்கிறேன்.

கிருஷ்ணமூர்த்தி என்ற
எம். எல். ஆனந்தன்,
சென்னை-6.

### கோத்தாரி மில் கூட்டுறவுப் பண்டகசாலைத் தேர்தல் அதிசயம்!

ஐயா,

கோத்தாரி-மில் கூட்டுறவுப் பண்டகசாலை டைரக்டர் தேர்தல் மிகவும் வேடிக்கையான முறையில், நியாயத்துக்கு விரோதமான முறையில் நடைபெற்றிருக்கிறது. கீழ்க்கண்ட முக்கிய விஷயங்கள் அந்த முறையில் குறிப்பிடத்தக்கன.

பங்குதாரர்களுக்குப் போதுமான அவகாசம் தரப்படவில்லை. 26.8–58 இரவோடிரவாக தேர்தல் அறிவிப்பு எழுதி வைக்கப்பட்டு 28-8-58 அன்று மாலை 3 மணிக்கு ஸ்பெஷல் மகா சபை என்றும் புதிய டைரக்டர் தேர்தல் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படுமென்றும் அறிவிக்கப்பட்டது.

பங்குதாரர் ஒருவர் தலைமை வகிக்க டெபுடி ரிஜிஸ்டிராரால் அனுப்பப்பட்ட அதிகாரியொருவர் முன்னிலையில் மகாசபை ஆரம்பமாகியது. 119 பேர் பங்கெடுத்துக் கொண்டனர்.

மகா சபைக்கு தலைவரோ, உபதலைவரோ தலைமை வகிக்கவில்லை. விதிகளுக்கு விரோதமாக, போதிய அவகாசம் தரப்படவில்லை. கைதூக்கித் தேர்தல் நடத்தியது வழக்கத்துக்கு விரோதமானது. பங்குதாரர்களின் ஆட்சேபனைக்குப் பின்னும் தேர்தல் நடத்தப்பட்டது.

இருப்புக் கணக்கு எடுக்கப்பட்டபொழுது பண்டகசாலைப் பணத்தில் துண்டுவிழும் ரூ. 4000 செயலாளர் கட்டவேண்டும்; இல்லையேல் அவர்மீது நடவடிக்கை எடுக்கப்படவேண்டும் என்று பங்குதாரர் "மினிட்ஸ்" புத்தகத்தில் எழுத வற்புறுத்தியும் அதை எழுத மறுத்துவிட்டனர். விதிகளுக்குப் புறம்பாகத் தேர்தல் நடத்துவதை ஆட்சேபித்தவர்களின் எண்ணிக்கையை "மினிட்ஸ்" புத்தகத்தில் பதிவு செய்ய மறுத்தனர்.

இவையெல்லாவற்றையும் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் கவனித்து உடனடி நடவடிக்கை மேற்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

எஸ். என். காளியண்ணன்,
உதவிச் செயலாளர்,
கோவை ஜில்லா
மில் தொழிலாளர் சங்கம்.

### மணியம்கரம் (கிஸ்தி) வசூல் அநீதி!

ஐயா,

மணியம்கரம் என்பது பத்மனுப சுவாமி கோவிலுக்குச் சொந்தமான பண்டாரவகைச் சொத்துக்களின்மேல் ஈடாக்கும் வரியாகும். இந்த வரி ஜன்மிக்கரம்போல் வசூல் செய்யப்பட்டு முன்னாள் திருவாங்கூர் அரசருக்குத் தரப்பட்டு வருகிறது.

இந்த மணியம்கரத்தை, மணியம் விவசாயிகளிடமிருந்து தவணையாகப் பெற்றுக்கொள்ளப்படும் என்று 1951-ம் வருடத்தில் வசூல் தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டபொழுது தீர்மானிக்கப்பட்டிருந்தது.

மாகாணச் சீரமைப்பின் பிறகு கேரள சென்னை அரசாங்கங்களின் ஒப்பந்தப்படி கன்னியாகுமரி ஜில்லாவிலுள்ள மணியம் குடிசிகைகளை திருவனந்தபுரம் கலெக்டரின் அதிகாரத்திற்குட்பட்ட மணியம் கச்சேரிகள் வழியாகப் பிரிவு செய்து கொள்ள வேண்டுமென்றும் குடிசிகைகள் பற்றிய நடவடிக்கை எடுக்க வேண்டிய நிலைமை ஏற்படின் சென்னை அரசாங்க அதிகாரிகளினால் வசூலிக்கப்பட்டு கேரள அரசாங்கத்திடம் ஒப்படைக்கப்படும் எனத் தீர்மானிக்கப்பட்டது.

ஜன்மிக்கரம் பற்றிக் கேரள சட்டசபையில் நிறைவேற்றப்பட்ட மசோதாவினை நமது ரெவினியூ அமைச்சர் கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறேன். கன்னியா குமரி ஜில்லாவில் இப்பொழுது வசூலிக்கப்படும் ஜன்மிக்கரத்தை உடனடியாக நிறுத்த வேண்டும் என்று வற்புறுத்த விரும்புகிறேன்.

இந்தப் பிரச்சினை கன்னியாகுமரி ஜில்லாவில் ஏராளமான விவசாயிகளின் முக்கியமான பிரச்சினையாகும். இதுபற்றி விரைவில் ஆவன செய்யப்படுமென்று எதிர்பார்க்கிறேன்.

என். பத்மநாபன்,
செயலாளர்,
குமரி ஜில்லா விவசாயிகள் சங்கம்.
இரணியல்.

### "எம்ப்ளாய்மெண்ட் எக்ஸேஞ்சு" அலுவலகத்தைப்பற்றி

ஐயா,

நான் மூன்றுண்டுகளாக வேலையில்லாமல் துன்பப்பட்டுக்கொண்டிருக்கிறேன். மூன்றுண்டுகளுக்கு முன்பு வேலை தேடித்தருமாறு "எம்ப்ளாய்மெண்ட் எக்ஸேஞ்சு" அலுவலகத்தில் பதிவு செய்து கொண்டேன். இன்று வரை விடாது என் பதிவைப் புதுப்பித்துக்கொண்டு வருகிறேன். இருப்பினும் வேலை கிடைக்கவில்லை; இங்கிலை பெருந்திண்டாட்டத்தில் என்னை மாட்டிவிட்டது. இந்தப் பிரச்னையில் அரசாங்கம் உருப்படியான நடவடிக்கை யேதும் எடுக்காவிட்டால் என் போன்றவரின் கதி என்னவது?

ஜே. டி. கொன்சால்வெஸ்,
சென்னை-13.

## காஞ்சீபுரம் குடிதண்ணீர் திட்டத்திற்கு சர்க்கார் மான்யம் கொடுக்கமாட்டார்களாம்

காஞ்சீபுரம், ஆக. 30—

காஞ்சீபுரம் நகரசபை கூட்டம் 28-8-58-ந்தேதி வியாழன் மாலை 5-மணிக்கு எல்லப்பா ஹாலில் திரு. வி. என். பெருமாள் நாயுடு நகரசபை தலைவர் தலைமையில் நடைபெற்றது. தோழர் கே. எஸ். பார்த்தசாரதி,(கம்யூனிஸ்ட் கட்சி நகரசபை அங்கத்தினர்) கேட்ட கேள்விகளுக்கு தலைவர் பதிலளிக்கும்போது 1957-58 வருடத்தில் நகரசபை கவுன்சிலர்கள் கொண்டுவந்து நகரசபையில் நிறைவேற்றிய தீர்மானங்கள் பூராவையும் இக்கவுன்சிலின் கால முடிவுக்குள் நிறைவேற்றிவைப்பதாக உறுதி அளித்தார். மற்றொரு கேள்வியில் மொத்தம் 16 பியூன்கள் இருப்பதாகவும், பியூன்கள் இன்ன வேலைதான் செய்யவேண்டுமென்று கவர்ன்மெண்ட் (ஜி. ஒ.) ஒன்றுமில்லை என்றும், கமிஷனர் தன் சொந்த உபயோகத்திற்காக பியூன்களை உபயோகப்படுத்தப்படுவது சம்பந்தமாக தான் கேள்வி கொடுத்திருந்ததாகவும், அதை நகரசபை கூட்ட நிகழ்ச்சி நிரலில் ஏன் சேர்க்கவில்லை எனவும் கேட்டார். அதற்கு தலைவர் பப்ளிக் சர்வென்டை பாதிப்பதாக உள்ளதால்தான் அனுமதிக்கவில்லை என்றும் குறிப்பிட்டார்.

காஞ்சீபுரம் குடி தண்ணீர் கஷ்டத்தைத் தீர்க்க பாலார் திட்டத்தை நிறைவேற்ற ரூ. 12½ லட்சம் செலவாகுமென்றும், இதில் 3 லட்சத்து 36 ஆயிரம் இன் நகரசபை கொடுக்கும் மற்றும் 9 லட்சம் சர்க்கார் கடனாக கொடுத்து உதவும், மான்யம் தரமுடியாது என சர்க்கார் கூறிவிட்டது எனவும் குறிப்பிடப்பட்டது.

பாலார் திட்டம் நிறைவேற்றும் பட்சத்தில் நகரில் குடித்தண்ணீர் பிரச்னை தீரும். 1000 வீடுகளுக்கு வீடு குழாய் சப்ளை செய்ய முடியும். வாங்குகிற கடனை 9 லட்சத்தை 1 சதம் வரி உயர்த்த வேண்டுமென முடிவு செய்தது.

(ந. நி.)

## ஒலியும் எதிரொலியும்

பெரியாரின் சுதந்திரத் தமிழ் நாடு கிளர்ச்சிக்கு வட நாட்டினர் அலறல்.

—'விடுதலை'த் தலைப்பு.

அண்ணாத்தே! ஏன் கொஞ்சமாகப் பெருமை அடிக்கிறீர்கள்? நமது "பெரியார்" கிளர்ச்சியைக் கண்டு, அகில உலகமும் அலறு அலறுண்ணு அலறுவது உங்கள் காதில் விழாமல் போனது ஆச்சரியத்திலும் ஆச்சரியமாக இருக்கிறது!

* * *

"உணவு பற்றாக்குறையாக இருந்த ராஜ்யம் ஏற்றுமதி செய்கிறது."

—மந்திரி பக்தவத்சலம்.

உற்பத்தியாகி விட்டதாலேயே தேவைபூர்த்தியாகிவிட்டதென்று விவரம் தெரிந்தவர்கள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். விளைகிற தானியம் வயிற்றுக்குப் போவது வேறு, வர்த்தகத்திற்குப் போவது வேறு.மந்திரியாரேஉங்கள்பூரிப்பு நாட்டு மக்களின் பசிப்பிணி தீரும் என்ற எண்ணத்தினாலல்ல : ஏற்றுமதி மூலம் பணம் அடிக்கலாமென்ற ஆசையினால்தான்.

ஐயா, பொய் சொல்லா மெய்யரே! மூன்றுகோடி சென்னை ராஜ்யவாசிகளுக்கும் நியாய விலையில் சோறு கிடைக்க உத்தரவாதம் செய்துவிட்டீர்களா? அப்பொழுது தான் உணவு பற்றாக்குறை தீர்ந்ததென்று நான் ஒப்புக் கொள்வேன்.

* *

"புதுவைக் காங்கிரஸ் தகராறு தீர தேபர் சமரச முயற்சி செய்கிறார்." —புது டில்லிச் செய்தி.

வாணியர் குருடர், செக்கு ஓட்டை, மாடுகள் தொத்தல், இடம் குண்டுங்குழியும், எள்பதர்: எண்ணெய் குடம் குடமாய் வேண்டுமென்று தேபர்ஜி தலைகீழ் நிற்கிறார்.

நிற்கட்டும். ஐயனே, ஆசை தீர நின்றுவிட்டுப் போகட்டும். நமக்கு என்ன?

* * *

அமெரிக்க நிறவெறியர் பேயாட்டத்தால், சிலுவைகள் சொக்கப்பனை கொளுத்தப்பட்[illegible]ர்மிங்காம் செய்தி.

அமெரிக்க நாகரீகமே கிறிஸ்துவ நாகரீகம் என்று டாலருக்கு கும்பிடு தண்டம் போடும், ரோமன் கத்தோலிக்க சாமியார்கள், இந்தச் 'சொக்கப்பனை'யைக் கண்ணாரக் கண்டு களிப்பார்களா!

* *

"மைசூர் காங்கிரஸ் புனிதமடைய, இப்பொழுதுள்ள எல்லாத் தலைவர்களும் விலக வேண்டும்."

—முன்னாள் முதன் மந்திரி அனுமந்தையா.

ஐயனே! நவராத்திரிக் கொலுப் பொம்மைகளுக்குக் கிராக்கி ஏற்பட்டிருக்கிறதென்று ஏன் பச்சையாகச் சொல்லத் தயங்குகிறீர்கள்? வெள்ளை வெள்ளைதான் ; கறுப்புக் கறுப்புத்தான்.

* * *

"லண்டனில் வெள்ளையர்—கறுப்பர் கைகலப்பு."

—லண்டன் செய்தி.

சுதந்தர உணர்ச்சி எவ்வளவு தூரம் வலுவடைந்திருக்கிறதென்பதைத் தெரிந்து கொள்ளாதவர்கள் இதிலிருந்தாவது தெரிந்து கொள்ளட்டும்.

* *

"நாட்டின் நிதி நெருக்கடி தீர ஏற்றுமதியே முக்கியம்"

—யூனியன் மந்திரி லால்பகதூர் சாஸ்திரி.

சாஸ்திரியாரே! ஏற்றுமதி செய்யவேண்டுவது, மொரார்ஜியை மட்டுமா? யூனியன் மந்திரி சபை முழுவதையுமா? தயவு செய்து உடன் பதில்.

* *

"4 அணு காங்கிரஸ்காரர்கள் எல்லாம் காமராஜர் ஆக முடியுமா?

—மந்திரி வெங்கட்ராமன்

யார் சொன்னார்கள் முடியுமென்று? அத்தனை முதல் மந்திரி பதவிகள், அத்தனை காரியக் கமிட்டி அங்கத்தினர் பதவிகள் இல்லையே.

அவரவர் தரத்திலிருந்து நேர்மையாக மக்களுக்கு ஊழியம் செய்யவேண்டும். மந்திரிகளை விட மக்கள் பெரியவர்கள், என்று [illegible]ண்டு புரியவெண்டும். தேசீ[illegible]யை சேவை உருவத்தில் காட்டுவதில், தாதாபாயை, திலகர் பெருமானை, லஜபதிராயை, காந்தியடிகளை, நாணயமாக, முடிந்த வரையில் பின்பற்ற வேண்டும்.

வெங்கட்ராமன் காங்கிரஸுக்கும் இந்தக் காங்கிரஸுக்கும் இரத்த சம்பந்தம், அர்த்த சம்பந்தம், திக்கு சம்பந்தம் கூடக் கிடையாது.

காமராசரை ஊழியர்களிடம் காட்டுவதில் லாபம் என்ன? இன்றைய உங்கள் காங்கிரஸ், "மோசம், நாசம், கம்பளி வேஷம்" அவ்வளவுதான்.

* *

"விவசாயிகளுக்கு 'போஸ்' கலப்பைகள்"

—சுசீந்திரம் செய்தி.

'கலப்பைகள்' நேதாஜியின் திருப்பெயரைத் தாங்கிவரட்டும், பரவாயில்லை. ஆனால் காங்கிரஸ் ஆட்சியில் கட்டாயம் தடிகள், 'காந்திக் குண்டாந்தடி' என்றும், துப்பாக்கிகள் 'மகாத்மா துப்பாக்கிகள்' என்றும், பீரங்கிகள் 'அண்ணல் பீரங்கிகள்' என்றும் பெயர்தாங்கி வந்து தீரவேண்டும். அப்பொழுதுதான் பெயர்ப் பொருத்தம் 'ஜம்' மென்று இருக்கும்.

—பஜ்ஜீ

# செங்கற்பட்டு நகரசபையில் அமளி

## போலீஸ் வரவழைக்கப்பட்டது!

## சபை ஒத்தி வைக்கப்பட்டது!

செங்கற்பட்டு, ஆக. 30—

இன்று மாலை 6 மணிக்கு நகர சபையின் கூட்டம், தலைவர் டாக்டர் ஆர். வரதராஜன் தலைமையில் கூடியது. தெருப் பெயர்கள் பற்றிய ஒரு தீர்மானம் முடிந்த பிறகு, இரண்டாவதாக அநுபந்தம் "எ" யில் கண்ட அரசாங்க உத்தரவுகள் சபையின் முன் வைக்கப்பட்டன. தலைவர் தன் அங்கீகாரமில்லாது, சப்-கலெக்டர் நடத்திய விசேஷ கூட்ட நடவடிக்கை குறிப்பையும், தன்னுடைய ராஜிநாமாவையும், [illegible]மிஷனர் இடைச்[illegible]சொருகல் செய்[illegible]து விட்டதை நீக்கிவிட உத்திரவிட்டார். இது பற்றி தாம் எழுதிய சுற்றறிக்கையையும் குறிப்பிட்டு மேற்படி விஷயங்களை ஆலோசிக்கத் தனிக் கூட்டம் நடத்த உத்தர விட்டிருப்பதையும் விளக்கினார். இதை ஷண்முகம் ஆட்சேபித்தார். கமிஷனரும் எழுந்து எதிர்த்துப் பேச ஆரம்பித்தார். 'ரூலிங்'கை-எதிர்த்துப் பேசக் கூடாதென தலைவர் அறிவித்தார். உப-தலைவர், பால சுப்ரமணிய முதலியாரும், மதுசூதனராவும் மேற்கொண்டு கூட்டம் நடத்த முடியாதபடி தடை செய்தனர்.

கமிஷனர் திரு.கோபால் இந்தக் கோஷ்டியுடன் சேர்ந்து ஆர்பாட்டம் செய்தார். இதற்கிடையில் சபையில் நுழைந்த ஏ. வேதாசல முதலியார் என்ற உறுப்பினர் (பஸ் முதலாளி) தலைவரை "நாற்காலியை மரியாதையாக விட்டுப் போ" என காட்டுக் கூச்சல் போட்டார். போலீஸ் வரவழைக்கப்பட்டது. என்றாலும் அமைதி நிலவவில்லை. உபதலைவர்—பாலசுப்ரமணிய முதலியார், நடவடிக்கை குறிப்புப் புத்தகத்தை தூக்கிக்கொண்டுவிட்டார். அதை கோவிந்தன், ராதாகிருஷ்ணன் பறித்திழுத்து இடத்தில் சேர்ப்பிக்க வேண்டியதாயிற்று. எம். ஏ. வாஹித் தலைவர் உத்தரவிற்கு கட்டுப்படாதவர்கள் ஆ[illegible]சபனை குறிப்பெழுதி மேலிட[illegible] அனுப்பலாம் அல்லது வெளி நடப்பு செய்யலாம், கமிஷனரும் இதற்குக் கட்டுப்பட்டவர்தான். குழப்பம் விளைவிப்பது விவேகமல்ல எனக் கூறினார். ஆனாலும் வேறொரு நாள் தலைவர் கூட்டத்திற்கு குறிப்பிட்டு கையெழுத்திட்டு கொடுத்தாலொழிய மேற்படி கூட்டம் நடத்த விடமாட்டோம் என பிடிவாதம் பிடித்தார். கமிஷனரும் இதை வற்புறுத்தினார். பல அங்கத்தினர்கள், இதற்கு தலைவர் உட்படக் கூடாதென எதிர்த்தனர். இங்கிலையில் ஷண்முகம் கூட்டத்தை ஒத்திவைக்கக் கோரியதை நாகரத்தின[illegible]முதலியார் ஆதரிக்க, சபை ஒத்திவைக்கப் பட்டது. (ந. நி.)

## பால்ராப்சன் குருஷ்சேவ் சந்திப்பு

மாஸ்கோ, ஆக. 31—

உலகப் புகழ்பெற்ற அமெரிக்க நீக்ரோ பாடகர் பால்ராப்சன் சோவியத் பிரதமர் குருஷ்சேவைச் சந்தித்தார். அவர்களிருவரும் மிகுந்த அன்புடனும் நட்புறவுடனும் உரையாடினர் என்று டாஸ் செய்தி எஜன்ஸி அறிவித்தது.

வெள்ளி யன்று இந்தச் சந்திப்பு நிகழ்ந்தது. கிரமியன் பகுதியிலுள்ள ஓர் ஓய்வு விடுதியில் இவர்கள் இருவரும் சந்தித்தனர்.

பின்னர் இருவரும் குழந்தைகளின் இசை நிகழ்ச்சி யொன்றில் கலந்துகொண்டனர். அப்போது "என்தாயகம் மிகப் பரந்தது" எனும் சோவியத் நாட்டுப் பாடலை ராப்சன் பாடி எல்லோரையும் மகிழ்வித்தார்.

## மாண்டிஸோரி அம்மையார் பிறந்த தின விழா

சென்னை, செப். 1—

நேற்றுமாலை மாண்டிஸோரி அம்மையார் பிறந்த தின விழா, அடையாறு கஸ்தூரிபாய் நகர் மாண்டிஸோரி பள்ளியில் இளாடி பி. கிராஸ் தலைமையில் கொண்டாடப்பட்டது. அப்பொழுது மாண்டிஸோரி அம்மையாரின் உருவப்படத்தை மேயர் தாரா செரியன் திறந்து வைத்தார். தொடக்கக் கல்வித் துறையில் மாண்டிஸோரி அம்மையாரின் அரும்பெரும் தொண்டுகளைப் பாராட்டி தாராசெரியன் பேசினார். தலைவர், அங்கு பயிலும் குழந்தைகளின் தெளிவான ஆங்கில மொழி உச்சரிப்பை வெகுவாகப் புகழ்ந்தார்.

சி. எஸ். ரத்தினசபாபதி, பள்ளிக்கு நல்ல கட்டிடம் எழுப்ப ஆவன செய்வதாக அறிவித்தார். எஸ். எஸ். ராகவன் எல்லோரையும் வரவேற்க, எஸ். கே. ஜானகி மேயருக்கு வரவேற்பிதழ் ஒன்று அளித்தார். மாநிலக் கல்லூரி உளவியல் பேராசிரியர் மேஜர் எஸ். பார்த்தசாரதி நன்றி கூறினார். (ந. நி.)

# காஞ்சி நகராட்சியின்கீழ் பணியாற்றும் ஆரம்ப ஆசிரியர்களின் அவலநிலை

### தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணித்தலைவர் அறிக்கை

காஞ்சிபுரம், ஆக. 29—

காஞ்சி நகராட்சியின்கீழ் 25 ஆரம்பப்பள்ளிகள் இருக்கின்றன. ஆனால் இவற்றில் போதிய ஆசிரியர்கள் இல்லை. நகராட்சி நிர்வாகமோ மேலும் ஆசிரியர்களைக் குறைப்பதில் கவனம் செலுத்தி வருகிறது.

உதாரணமாகச் சேர்மன் சாமிநாத முதலியார் ஆரம்பப் பாடசாலையில் 1-வது வகுப்பில் 115 மாணவர்களும், 5-வது வகுப்பில் 75 மாணவர்களும், 6-வது வகுப்பில் 65 மாணவர்களும் சராசரியாகப் படிக்கிறார்கள். இந்த மாணவர்களின் எண்ணிக்கையும் புதிய கல்வி உத்திரவையும் ஆசிரியரின் தொகையையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இது மிகக் குறைவானதென விளங்கும். இதே மாதிரி பல நடைமுறைகளைச் சுட்டிக் காட்ட இயலும்.

ஆவடி பள்ளியில் 310 மாணவர் இருந்தபொழுது 10 ஆசிரியர் இருந்தனர். இப்போது 300 பேராக இருக்க ஆசிரியரின் தொகை 9 ஆகக் குறைக்கப்பட்டது.

நகர சபையின் இத்தகைய ஆட்குறைப்புக் கொள்கையால் பாதிக்கப்பட்ட ஆசிரியர்கள் ஏராளம்.

ஆசிரியர் வேலைக்கு ஆள் எடுக்கும்பொழுது ஏற்கனவே வேலை பார்த்த வரை நியமிப்பது தான் எங்கும் வழக்கம். இம்முறை கூட நகர சபையில் பின்பற்றப் படுவதில்லை.

விடுமுறை வசதிகளும் சரியானபடி செய்து தரப்படுவதில்லை. இவ்வாறு தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர் கூட்டணி அமைப்பாளர் ஒய். வி. அப்பாராவ் வெளியிட்டுள்ள அறிக்கையில் கூறியுள்ளார். (ந. நி.)

## இந்திய கணித சங்கத்தின் 24-வது மாநாடு

பூனா, செப். 1—

இந்திய கணித சங்கத்தின் 24-வது மாநாடு டிசம்பர் 31முதல் நான்கு நாட்கள் பூனாவில் நடைபெறும் என்று தெரிகிறது. இந்த மாநாடு பூனா சர்வகலாசாலையின் சார்பில் நடைபெறும். அண்ணாமலைப் பல்கலைக் கழகக் கணிதப் பேராசிரியர் வி. கணபதி அய்யர் தலைமை வகிப்பார்.

# பாரதி காட்டிய வழியில் ஜாதி பேதங்களை ஒழிப்பீர்!

## நம்மாள்வார்பேட்டை வாசகசாலை ஆண்டு விழாவில் ஜீவா

சென்னை, ஆகஸ்ட் 31—

30-8-58 மாலை 6-30 மணிக்கு 23-வது வட்டத்திலுள்ள நம்மாள் வார்பேட்டை பாரதி இரவு பாடசாலையின் முதலாவது ஆண்டு விழா பொதுக்கூட்டம், வட்ட காங்கிரஸ் கவுன்சிலர் திரு. கோவிந்தசாமி தலைமையில் நடைபெற்றது.

வாசக சாலையின் செயலாளர் 1 ஆண்டிற்குள் 30 குழந்தைகள் வாசித்து வந்த இந்த வாசக சாலையில் 100 குழந்தைகள் வாசித்து வர உருப்படியான காரியம் செய்யப்பட்டிருப்பதை விளக்கி அறிக்கை சமர்ப்பித்தார்.

பிறகு பேசிய கே. முருகேசன் பாரதியார் காட்டிய வழி தமிழ் மக்களுக்காக விளங்குகிறது என்றார்.

இறுதியாக இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தேசியக்குழு அங்கத்தினரும் ஜனசக்தி ஆசிரியருமான தோழர் ஜீவா, "பாரதியும்-மக்களும்" என்ற பொருள் பற்றி 1½ மணி நேரம் பேசினார். அவர் குறிப்பிட்டதாவது: மதச் சண்டைகள், ஜாதிச் சண்டைகள், நிறச் சண்டைகள் அறவே கூடாதென்றும், சமரசமாக ஒரு தாய் வயிற்று மக்கள் போல் வாழ வேண்டுமென்றும், ஜாதிப் பிரிவுகள் சூதுப் பிரிவுகள் என்று பாரதி போதித்ததை எடுத்துக் காட்டினார். ஜாதி உயர்வு தாழ்வு சண்டைகளை அறவே போக்கி அன்போடு வாழ்வதே பாரதிக்கு நாம் செலுத்தும் நல்ல மரியாதையாகும். உலகமே என் நாடு, மனித சமூகமே என் சகோதரன் என்ற உன்னதக் கொள்கைகளை போதித்தவன் பாரதி. பிரஞ்சுப் புரட்சி தந்த சமத்துவம், சகோதரத்துவம், விடுதலை என்று முழங்கிய முப்பெரும் கோஷங்களை பாரதி உலகறிய எடுத்துக்காட்டிஇருப்பதை நாம் கவனித்து நடக்கவேண்டுமென்றார். பாரதி வேதத்தைக் கற்றுணர்ந்து கொள்வன கொண்டு தள்ளவன தள்ளி, பழைய வேதம் - புதுமை செய் என்று எடுத்துக் காட்டியிருப்பதை கவனியாமல் சிலர் பேசுவது தவறென்றார். நமக்கு எல்லாத் துறைகளிலும் பாரதி பாடல்கள், கட்டுரைகள் பல அறிய உண்மைகளை எடுத்துக் காட்டுகின்றன. இதைப் புரிந்துகொண்டு மக்கள் முன்னேற்றத்திற்கும் அவைகளைப் பயன்படுத்த வேண்டுமென்றார். ஒரு நண்பர் கேட்ட கேள்விக்கு ஜீவா பதில் கூறிய பின்னர், வாசகசாலையின் சார்பாக நன்றி கூறப்பட்டு, வாசக சாலை குழந்தைகளால் தேசிய கீதம் பாடப்பட்ட பின்னர் கூட்டம் இனிது முடிந்தது. (ந. நி.)

### ஜாம்ஷெட்பூரில் 600 பேர்கைது

ஜாம்ஷெட்பூர், ஆக. 29—

சட்ட விரோதமான வேலை நிறுத்தத்தில் கலந்துகொண்டதாகக் குற்றம்சாட்டி, இங்கு 600 தொழிலாளர்களுக்குமேல் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள்.

மே மாதத்தில் நடைபெற்ற வேலை நிறுத்தத்தை ஒட்டி டாட்டா கம்பெனி நிர்வாகத்தினால் விலக்கப்பட்ட தொழிலாளர் அனைவரும் கைது செய்யப்பட்டுள்ளனர்.

தொழில் தகராறுச் சட்டப்படியே இந்தத் தொழிலாளர்கள் கைது செய்யப்பட்டிருப்பதாக அதிகாரிகள் கூறுகிறார்கள். ஆனால் உருக்கு நகரமான இந்த நகரில் தொழிற்சங்க உரிமைகளை ஒடுக்குவதற்காக எடுக்கப்படும் பழிவாங்குதல் நடவடிக்கையே இது என்று தொழிற்சங்க வட்டாரங்கள் கருதுகின்றன. (ஐ.பி.ஏ.)

# மனிதகுலத்தின் நலனுக்கு அணுசக்தியின் உதவி

## இருபது நாடுகளின் பொருட் காட்சி

### ஐ. நா. பொதுச் செயலாளர் நம்பிக்கை

ஜெனிவா, ஆக. 31—

இருபது நாடுகளின் சுபிட்சத்திற்கு அணுசக்திப் பொருட்காட்சியை ஐ. நா. வின் பொதுச் செயலாளர் ஹாமர்ஷோல்டு இன்று தொடங்கி வைத்தார்.

அணு சக்தியை ஆக்கவேலைக்குப் பயன்படுத்தும் துறையில் இதுவரை அடைந்த முன்னேற்றத்தினை இப்பொருட்காட்சி விளக்குவதாக அவர் கூறினார்.

சமாதான, ஆக்கவேலைகளுக்காக அணுசக்தியைப் பயன்படுத்துவதுபற்றி நடைபெற்ற இரண்டாவது அகில உலக மாநாட்டின் ஒத்துழைப்புடன் இந்தப் பொருட்காட்சி நடைபெறுகிறது.

இன்று தொடங்கும் இந்த மாநாட்டுக்கு 66 நாடுகளிலிருந்து 5,000 விஞ்ஞானிகள் வந்திருக்கின்றனர். மாநாடு இரண்டு வாரங்களுக்கு நடைபெறும் என்று தெரிகிறது.

சமாதான முறையில் தீர்வு காணுவதற்கான பேச்சு வார்த்தைகளைத் தொடங்கும, நோக்கத்துடன் மத்திய கிழக்குக்கு ஐ. நா. பொதுச் செயலாளர் "சமாதானத் தூது" சென்று கொண்டிருக்கிறார், அதற்கிடையில் இந்த மாநாட்டினைத் தொடங்கி வைக்கிறார். "மனித குலத்தின் நலத்துக்காகவும் மேம்பாட்டுக்காகவும் எல்லா நாடுகளும் தம் தம் ஆராய்ச்சியால் விளைந்த நன்மைகளையும், புதிய கண்டு பிடிப்புகளையும் பகிர்ந்து கொள்ளும் தீர்மானத்துக்கு வந்திருப்பதை இம்மாநாடு மறுபடியும் உறுதிபபடுத்துமாக" என்று அவர் கூறினார். (ராய்ட்டர்)

# சென்னையில் சென்ற வாரத்திய மார்க்கெட் நிலவரங்கள்

## மணிலா பயிறு எண்ணெய் மறுபடியும் விலை ஏற்றம்; மட்டந்தர தோல்களுக்கு கேள்வி:

### அரிசி வரத்து அதிகரிப்பு

சென்ற வாரத்திலும் தென்னாற்காடு ஜில்லாக்களில் பெய்த மழையினால் மாரிகால மணிலா பயிறுக்கு அனுகூலம் உண்டு. இவ்வருஷம் மணிலாப்பயிறு, எண்ணெய் இவைகளுக்கு ஏற்றுமதி இல்லாதிருந்தும் மணிலா வெள்ளாமை திருப்திகரமாக இருந்தும், விலைகள் ஏறி வருவது வியக்கதக்க விஷயமாக இருப்பதாக கருதப்படுகிறது. சென்னையில் சென்ற வார முதலில் பாரம் 1க்கு ரூ. 185 ஆக ஆரம்பித்து வார மத்தியில் ரூ. 185 ஆக குறைந்து மறுபடியும் வார இறுதியில் ரூ. 186 ஆக ஏறியுள்ளது.

மணிலா எண்ணெயிலும் வார முதலில் ரூ. 347 ஆக ஆரம்பித்து வார மத்தியில் ரூ. 345 ஆக குறைந்து வார இறுதியில் ரூ. 350 ஆக ஏறியுள்ளது. கல்கத்தா வியாபாரிகள், தென்னாற்காடு ஜில்லா மில்ஆலைகளில் 1250 பாரம் எண்ணெய் செப்டம்பர் முதல் வார டெலிவரிக்கு வாங்கினார்கள். ஆனால் வாய்தா மார்கெட் விலைகள் வார முதலில் ஒரே சீதானமாக இருந்து பின்னர் ஒரே அடியாக ஏற தலைப்பட்டன.

சென்னையில் சென்ற வாரத்தில் திரேஸ் மாறு வரத்து சுமாராக இருந்தும் விலைகளில் மாறுதல் ஏதாவும் இல்லை. வரட்டு தோல்களுக்கு விலை அதிகமாக இருப்பதால் வியாபாரிகள் கொள் முதல் செய்ய பயப்படுகிறார்கள். ஐந்தாந்தர சரக்குகளுக்கு கிராக்கி இருப்பதால் விலைகள் அதிகமாக திர்ந்தன. திரேஸ்கண் எருவில் மூன்றாந்தர சரக்குகளுக்கு கேள்வி நன்றாக இருந்தது. திரேஸ்கண் எரு, மாறு மார்க்கெட்டுகளில் குறிப்பிடத் தக்க மாறுதல் எதுவும் கிடையாது. ஏற்றுமதி ஸ்தலங்களில் மட்ட ரகங்களுக்கு கிராக்கி அதிகமாக இருந்தது.

இந்த வருஷம் வட இந்தியாவில் பெய்த மழையில், கடலை, துவரை முதல் பருப்பு வகைகள் விளைய கூடிய இடங்களுக்கு ரொம்பவும் சேதம் ஏற்பட்டதாலும், இருப்பு குறைவாக இருப்பதாலும் விலைகள் கூடுதலாகவே இருக்கும். இன்னும் 6, 7 மாதங்கள் வரை இறங்கும் என்று எதிர்பார்க்க முடியாது. பூண்டு விலைகள் கொஞ்சம் இறங்குமுகமாக இருக்கிறது. மற்றபடி மார்க்கெட்டில் குறிப்பிடத்தக்க மாறுதல் கிடையாது.

சென்ற வாரத்தில் ஆந்திரா ஆலைகளிலிருந்து சென்னைக்கு ரயில்வே வாகன் மூலமாக தாராளமாக அரிசி வந்தது. அப்படி அரிசி வந்தும் சென்னை மார்கெட்டுகளில் விலைகள் குறையவில்லை. காரணம் என்னவென்றால் உள்ளூர் உற்பத்தி குறைந்ததே.

# இந்திய ரயில்வேக்களைப் பற்றிய சில ருசிகரச் செய்திகள்

## இந்திய அரசாங்கக் குறிப்பு

புதுடில்லி, ஆக. 30—

இந்திய அரசாங்க ரயில்வே அமைச்சர் அலுவலகம் இன்று வெளியிட்டுள்ள குறிப்பில் காணப்படும் சில விபரங்களாவன.

சுதந்திரம் அடைவதற்கு முன் நிகழ்ந்த எல்லாவகை விபத்துக்களையும் சேர்த்து 1948-49-ல் கணக்கிடப்பட்டவை 24,120. இது படிப்படியாகக் குறைந்து 1957-58-ல் எல்லா வகைப்பட்ட விபத்துக்களுமாகச் சேர்ந்து 9,011 ஆயிற்று. இவற்றில் 17 பெரும் விபத்துக்களும் அடங்கும்.

### விபத்து விகிதம்

ஒவ்வொரு 100 மில்லியன் ரயில் மைல்களுக்கும் 31 மோதுதல்களும், 189 தண்டவாளத்திலிருந்து கீழிறங்குதல்களும் 1947-48-ல் நிகழ்ந்திருக்கின்றன. 1956-57-ல் 11 மோதுதல்கள், 91 தண்டவாளத்திலிருந்து கீழிறங்குதல்களும் 1957-58-ல் 14 மோதல்களும் 92 தண்டவாளத்திலிருந்து கீழிறங்குதல்களும்குறிக்கப்பட்டிருக்கின்றன.

1956-57 ஒவ்வொரு 100 கோடி பிரயாணிகளில் எழுவர் கொல்லப்பட்டனர்; எட்டுப் பேர் காயமடைந்தனர்.

### மொத்த நீளம்

இந்தியாவின் ரயில்வேக்களில் மொத்த நீளம் 49,512 மைல்கள் 10,020 ரயில்வே எஞ்சின்களையும் 24,082 பிரயாணி வண்டிகளையும் 2,82,736 சாமான்களை ஏற்றிச் செல்லும் வண்டிகளையும் 7489 ரயில்வேயைச் சேர்ந்த சாமான்கள் ஏற்றிச் செல்லும் வண்டிகளையும் இந்திய ரயில்வேக்கள் நிர்வகிக்கின்றன. நாள்தோறும் 7297 வண்டிகளை மீடர் கேஜிலும் பிராட்கேஜிலும் ஓட்ட வேண்டியிருக்கிறது. இவற்றில் 4,399 பிரயாணிகள் வண்டிகள்.

### ஒரு நாளைக்கு 38 லட்சம் பிரயாணிகள்

ஒவ்வொரு நாளும் 38 லட்சம் பிரயாணிகள் இந்திய ரயில்வேக்களில்பிரயாணம் செய்கின்றனர். இந்தியாவின் மொத்த ஜனத்தொகையில் இது ஒரு சதவீதமாகும்.

360,000 டன் சாமான்களை ஓரிடத்திலிருந்து அடுத்த இடத்துக்குக் கொண்டுபோகவேண்டியிருக்கிறது. ஒவ்வொரு டன் சாமானும் குறைந்தது சராசரி 332 மைல் தூரம் கொண்டுசெல்லப்படுகிறது. 23,000 வாகன்களில் சாமான்கள் தினந்தோறும் ஏற்றப்படுகின்றன.

தினந்தோறும் 562,000 மைல்கள் இந்திய ரயில்வேக்கள் ஓடுகின்றன. இது உலகத்தின் சுற்றளவில் 25 தடவைகளாகும். 15 மைலிலிருந்து 60 மைல்வரை வண்டிகளின் வேகம் வேறுபடுகிறது.

### 6387 ரயில் நிலையங்கள்

நாடெங்கிலும் 6,387 ரயில் வண்டி நிலையங்கள் பரந்துகிடக்கின்றன.

7,000 தடவைகள் ரயில்வே அடையாளங்கள் காட்டப்படுகின்றன. 350,000 தடவைகள் அபாய அறிவிப்புகள் தரப்படுகின்றன.

81,300 சிறிய பாலங்களையும் 7765 பெரிய பாலங்களையும் இந்திய ரயில்வேக்கள் நிர்வகித்து வருகின்றன இவற்றுள் சில புதுப்பிக்கப்படவேண்டும். புதிதாகக் கட்டப்படவேண்டிய பாலங்களும் சில உண்டு.

## ஆப்பிரிக்க நூல் நிலையத்திற்கு பாரத சர்க்கார் நன்கொடை

புது டெல்லி, செப். 1—

ஆப்பிரிக்காவில் தங்க நியாகா என்னும் பகுதியிலுள்ள தாரஎங்ஸயாமில் நிறுவப் பெற்றுள்ள ஒரு நூல் நிலையத்திற்கு 12 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள புத்தகங்களை பாரத சர்க்கார் நன்கொடையாக அளித்துள்ளது. இந்த நூல் நிலையம் இந்தப் பகுதியில் வாழும் இந்தியர்களின் பரோபகார சங்கம் நிறுவியுள்ளது. இச்சங்கத்தின் சார்பில் ஒரு மருத்துவசாலையும் நடத்தப்படுகிறது. நன்கொடையளித்த நூல்கள் பெரும்பாலும் காந்திஜி எழுதியவையாகும்.

# பெயர் பதிந்தும் வேலை கிடைக்கவில்லை

## வேலை தேடித்தரும் ஸ்தாபனத்தின் நிலை

புதுடில்லி, ஆக. 30—

வேலை தேடித்தரும் ஸ்தாபனங்கள் 1958 ஜூன் மாதம் 18,945 பேருக்கு வேலை தேடித்தந்திருக்கின்றன; அதற்கு முந்திய மாதத்தில் அந்த எண்ணிக்கை 20,530 ஆகும். எனவே, இதில் 1,585 குறைந்திருக்கிறது. அந்த குறைவு பிரதானமாக மேற்கு வங்காளம், பஞ்சாப், பம்பாய், கேரளா, ஆந்திரா ஆகியவிடங்களில் காணப்பட்டது. உத்தரப் பிரதேசம், ராஜஸ்தான் ஆகியவிடங்களில் வேலை தேடித்தரப்பட்டவர்களின் எண்ணிக்கையில் அதிகரிப்பு காணப்பட்டது.

ஜூன் மாதம் வேலை தேடித்தரப்பட்டவர்களில் 4 623 பேருக்கு சர்க்காரிலும் 10,253 பேருக்கு ராஜ்ய சர்க்கார்களிலும் 1,738 பேருக்கு சர்க்கார் சார்பான ஸ்தாபனங்களிலும் ஸ்தல ஸ்தாபனங்களிலும், மீதியுள்ளவர்களுக்கு இதர ஸ்தாபனங்களிலும் வேலை தேடித்தரப்பட்டது.

இந்த ஸ்தாபனங்களின் சேவையைப் பயன்படுத்திய முதலாளிகளின் எண்ணிக்கை 7,068 லிருந்து ஜூன் மாதத்தில் 6,361 ஆகக் குறைந்தது, ஜூன் மாதம் அறிக்கப்பட்ட காலி ஸ்தானங்கள் எண்ணிக்கை 29,144; மே மாதம் அந்த எண்ணிக்கை 35,629.

பதிவுப் புத்தகத்தில் பெயர் பதிவு செய்து கொண்டவர்களின் எண்ணிக்கை ஜூன் மாதத்தில் 1,94,869 ஆக இருந்தது; அந்த எண்ணிக்கை எந்த ஒரு மாதத்தியவும் இதுவரை பெயர்பதிந்த எண்ணிக்கைகளை எல்லாம்விட உச்சமாகும். முந்திய மாதத்தைவிட இம்மாதம் 16,027 அதிகமாகும்.

பெயர் பதிந்து இன்னும் வேலை கிடைக்காதவர்களின் எண்ணிக்கை ஜூன் இறுதியில் 10,01,573 ஆகும். அது மே மாதக் கடைசியில் 9,63,345 ஆக இருந்தது.

### டில்லி செல்லும் 'டிலக்ஸ்' வண்டி ரத்து

புதுடில்லி, செப். 1—

மத்திய இந்தியாவில் கனத்த மழையின் காரணமாக, சென்னையிலிருந்து டில்லி செல்லும் 'டீலக்ஸ்' வண்டி ரத்து செய்யப்பட்டது. அதுபோலவே செப். 3 ல் டில்லியை விட்டுப் புறப்படும் வண்டியும் ரத்து செய்யப் பட்டுள்ளது.

## இந்திய மொழிகளில் விஞ்ஞானச் சொற்கள்

### ரோமன் வரி வடிவத்தில் எழுத்துப் பெயர்ச்சி

புதுடில்லி, ஆக. 32—

மத்திய கல்வித் துறையினரால் நியமிக்கப்பட்ட "சொல்லாக்கக் குழு" ஒரு திட்டத்தை வெளியிட்டிருக்கிறது. இந்தி உள்ளிட்ட இந்திய மொழிகளில் கலை விஞ்ஞான தொழில் நுணுக்கச் சொற்களை ஒரே மாதிரியாக வடிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் தான் இக்குழு நியமிக்கப்பட்டது. சொற்களை ரோமன் வரி வடிவத்தில் எழுத்துப் பெயர்ச்சி செய்யலாம் என்று அந்தக் குழு இப்பொழுது திட்ட மொன்றினை வெளியிட்டிருக்கிறது.

எழுத்துக்கள், உச்சரிப்பு இவற்றில் குழப்பம் ஏற்படாத வகையில், ரோமன் எழுத்துவடிவத்தில் விஞ்ஞானச் சொற்களை இந்திய மொழிகளில் எழுதுவதற்கு மிகச் சரியான முறையொன்று கண்டு பிடிக்கப்பட வேண்டியதன் அவசியம் நாட்டில் வெகுவாக உணரப்பட்டு வந்தது. அந்த முறை தெளிவாகவும் எளிதாகவும் சரியாகவும் அமைந்திருக்க வேண்டுவது அவசியம்.

வழக்கத்திலிருக்கும் ரோமன் எழுத்துக்களுடன் (—) (:) (' ') (" ") போன்ற நான்கு குறிகளை மட்டும் சேர்த்துப் பயன்படுத்துவது இப்போதைய திட்டம்.

இந்த குறிகளின் உதவியுடன் எல்லா இந்திய மொழிகளிலும் உள்ள ஒலி வடிவங்களையும் எவ்விதக் குழப்பமுமின்றி எழுத முடியும் என்று கூறப்பட்டிருக்கிறது,

## காவேரிப் படுகையில் எண்ணெய்ச் செல்வம்

புதுடில்லி, ஆக. 31—

தமிழகத்திலுள்ள காவேரி நதிப் படுகையில் எண்ணெய்ச் செல்வம் கிடைக்க வாய்ப்பிருக்கிறதா என்பதைப் பரிசீலிக்க அக்டோபர் மாதத்தில் பூதத்துவ ஆராய்ச்சிக்குழு ஒன்று ஆராய்ச்சிகள் நடத்தும்.

இந்தத் தகவலை மக்கள் சபையில் சுரங்க இலாகா மந்திரி கே. டி. மாளவியா ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் வெளியிட்டார்.

# பிரெஞ்சு மண்ணிலேயே அல்ஜீரிய விடுதலைப் போர்

## விடுதலை இயக்கத்தின் திட்டம்

கெய்ரோ, ஆக. 31—

அல்ஜீரிய விடுதலை இயக்கம் இன்று விடுத்துள்ள அறிக்கையில் பிரான்சிலுள்ள பெட்ரோல் கிடங்குகளில் நடத்தப்பட்ட தாக்குதல்கள்அல்ஜீரியாவின்விடுதலைப் போராட்டத்தை பிரெஞ்சு மண்ணுக்கே கொண்டு செல்லும் முயற்சியில் மு[illegible]படி தான் என்று கூறியிரு[illegible] அல்ஜீரியாவுக்கு விடுதலை கோரும் ரகசிய இயக்கத்தின் "கூட்டுச் செயல் கமிட்டி" பிரான்சில் ஆக. 24, 25 தேதிகளில, தன்னுடைய அல்ஜீரியப் படையின் தாக்குதல்களைத் தொடங்குமாறு ஆணை பிறப்பித்திருந்ததாகக் கூறியது.

இந்தத் தாக்குதல்களின் நோக்கம், எதிரி விமானப் படையினரால் பயன்படுத்தப்படும் பெட்ரோல் கிடங்குகளை அழிக்கவும், அல்ஜீரிய விடுதலைப் போரை பிரெஞ்சு மண்ணுக்கும் விஸ்தரிப்பதும் ஆகும்.

அல்ஜீரிய விடுதலைக் கிளர்ச்சிக்கு பிரஞ்சு மக்களின் அனுதாபத்தைப் பெறுவது தங்கள் முக்கிய நோக்கமென்று இந்தக் கமிட்டி மேலும் தெரிவிக்கிறது.

காலனியாதிக்க விருப்பமுள்ள பிரஞ்சு மக்களுக்கு அதன் உண்மையான நிலையை எடுத்து விளக்குவதும் அவசியமானதாகும்.

சுதந்திர அல்ஜீரியாவின் விருப்பமின்றி அல்ஜீரியாவின் செல்வத்தைப் பிறர் சுரண்டிச் செல்ல அனுமதிக்க முடியாதென்று இந்த இயக்கம் அறிவித்திருக்கிறது.

ஜெனரல் டிகால், அல்ஜீரியப் பிரச்சினைக்குத் தீர்வுகாணத் தயாரித்திருக்கும் திட்டத்தை இக்கமிட்டி ஒப்புக்கொள்ளவில்லை. "உலகுக்கு நம்முடைய நியாயமான போராட்டத்தினை உணர்த்துங்கள். அது நமக்கு வெற்றி தேடித்தரும்" என்று இப்போது போராட்டத்தில் ஈடுபட்டிருக்கும் தன் வீரர்களுக்குக் கமிட்டி அறைகூவல் விடுத்திருக்கிறது. (ராய்ட்டர்)

## தமிழ் நாடு என். ஜி. ஓ. சங்கக் கூட்டம்

நெல்லை, ஆக. 30—

ஆக. 27-ந் தேதி மாலை நெல்லை மாவட்டத்தின் தமிழ் நாடு என். ஜி. ஓ. சங்கக் கூட்டம் கொக்கிறக்குளத்திலுள்ள என். ஜி. ஓ. சங்கப் பொழுதுபோக்கு மைதானத்தில் திரு. ஐ. வி. சாமுவேல் தலைமையில் நடந்தது. தலைவர் தாம் 1-8-1958-ல் கவர்னரை சந்தித்த விபரம் பற்றிப் பேசினார். அவர் பேசும்போது கவர்னர் தாம் சென்னை சென்றவுடன் மந்திரிகளிடம் கலந்தாலோசித்து ஆவன புரிவதாக வாக்குறுதி அளித்ததாகக் கூறினார். அதன் பின்னர் செயலாளர், ஜெ. சேதுபாஸ்கரன் சேலம் மாநில மகாநாடு பற்றிப் பேசினார். அவர் பேசும்போது இன்னும் ஐந்து மாதங்களுக்குள் இடைக்கால நிவாரணம் கிடைப்பதற்கு நல்ல வாய்ப்புகள் உள்ளன என்றும், அவ்விதம் நிவாரணம் கிடைக்காவிடில் நாம் ஒரு மாபெரும் போராட்டம் நடத்த தயாராக இருக்கவேண்டுமென்றும் கூறினார். (ந. நி.)

# பாரதத்திற்கே பெருமைதரும் பக்ரா நங்கல் திட்டத்தின் முன்னேற்றம்

## சில விவரங்கள்

புதுடில்லி, செப். 1—

பக்ரா நங்கல் திட்டமானது, முதவாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்பட்டு, இரண்டாவது திட்டத்தில் தொடர்ந்து நிறைவேற்றப்பட்டு வருகிற மிகவும் முக்கியமான திட்டங்களிலொன்றாகும். இத்திட்டம் பூர்த்தியடையும்போது, நாட்டில் 10 லட்சம் டன் உணவுத் தானியங்களும் 6,00,000 பேல் நீண்ட இழைப் பருத்தியும் அதிகப்மடியாய் உற்பத்தியாவதற்கு வகை ஏற்படும்.

கிராமப் பிரதேசங்களில் புதிதாக 30 நகரங்களும் அனேக கிராமங்களும் உருவாகும்.

இந்தியாவின் வடமேற்குப் பகுதியிலுள்ள அனேக புதிய தொழில்துறைத் திட்டங்களுக்கு இத்திட்டத்தின் மூலம் மின்சார சக்தி மலிவாக சப்ளை செய்யப்படும்; புது டில்லிக்கும் மின்சார சப்ளை கிடைக்கும். நங்கலில் இப்போது ரசாயன உரத் தொழிற்சாலையொன்று நிர்மானிக்கப்பட்டு வருகிறது. அது ஆண்டு தோறும் சுமார் 4,00,000 டன் ரசாயன உரத்தை (நைட்ரோ லைம்ஸ் டோன்) உற்பத்தி செய்யும்; அது 1,60,000 கிலோ வாட் மின்சார சக்தியைப் பயன்படுத்திக் கொள்ளும்.

பக்ரா அணைக்கட்டு ஸ்தலமானது டில்லியிலிருந்து 200 மைல் தூரத்தில் ஸட்லெஜ் நதியில் ஆழ்ந்த பள்ளத்தில் அமைந்திருக்கிறது. வெள்ளங்கள் ஏற்படும் போதுவருகிறஉபரித்தண்ணீரைச் சேமித்து வைப்பதற்காக சுமார் 700 அடி உயரமுள்ள அணை ஒன்று அங்கே இப்போது கட்டப்பட்டு வருகிறது. அந்த ஸ்தலத்திலிருந்து கீழ் நோக்கிச் சென்றால் 3 மைல் தூரத்தில் நங்கல் அணைக்கட்டு ஸ்தலம் அமைந்திருக்கிறது. அங்கே சட்லெஜ் நதி ஜலத்தை நங்கல் கால்வாயில் திருப்பி விடுவதற்காக 90 அடி உயரத்தில் ஒரு அணை கட்டப்பட்டிருக்கிறது.

1908-ம் வருஷத்திலிருந்து பரிசீலனையிலிருந்து வருகிற இத்திட்டம் 1945-ல் வேலைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. இத்திட்டத்தின் மூலம் பஞ்சாப், ராஜஸ்தான் ஆகிய ராஜ்யங்களில் ஆண்டு தோறும் சுமார் 36 லட்சம் ஏக்கராவுக்குப் பாசன வசதி கிடைக்கும்.

இத்திட்டத்தின் மூலம் 4,00,000 கிலோ வாட் மின்சார சக்தி உற்பத்தியாகும். இந்த மின்சார சக்தி வீட்டு உபயோகங்களுக்கும், தொழில் துறை, விவசாயத் துறை உபயோகங்களுக்கும் பயன்படுத்தப்படும். அது குழாய்க் கிணறுகளை இயக்குவதற்கும் பயன்படும்.

வெள்ளங்களினால் ஓடி வருகிற பெருவாரியான தண்ணீரை இந்த அணைக்கட்டு தேக்கி வைக்கிறபடியால் இந்தியாவிலும் பாகிஸ்தானிலும் சட்லெஜ் நதி வெள்ளினால் ஏற்படுகிற சேதங்கள் கனிசமாகக் குறைந்துவிடும்.

சிர்ஹிண்ட் கால்வாயின் சீரமைப்பு வேலை பல வருஷங்களாக நடைபெற்று வருகிறது; 1949-லிருந்து அக்கால்வாயில் தண்ணீர் ஓட்டம் அதிகரித்திருக்கிறது.

நங்கல் திருப்ப அணை, நங்கல் கால்வாய், நங்கல் கால்வாய் மீது ஒரு மின்சார உற்பத்தி நிலையம் ஆகியவை பூர்த்தி செய்யப்பட்டுள்ளன. அவை வருஷத்தில் சுமார் 4 மாத காலம், அதாவது நதியில் அதிகப் பிரவாகம் ஏற்படுகிற காலத்தில் வேலை செய்து வருகின்றன.

பக்ரா அணை உச்சபட்சம் 57 லட்சம் ஏக்கரா அடி ஜலத்தைச் சேமித்து வைக்கும் சக்தி வாய்ந்தது.

பக்ரா அணையும் அதன் மின்சார உற்பத்தி நிலையமும் 1960 1958 ஜூலையில் நதியில் வெள்ளம் ஏற்படும்போது அந்த அணைக்குப் பின்புறத்தில் 4,00,000 ஏக்கரா ஜலத்தைத் தேக்கி வைப்பது சாத்தியமாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

1959 வெள்ளங்களின்போது, அதாவது ஜூலை, ஆகஸ்ட் ஆகிய மாதங்களில் சுமார் 31 லட்சம் ஏக்கரா அடி உபரித் தண்ணீரை அது சேமித்து வைக்கும்; அதில் 17 லட்சம் ஏக்கரா அடி தண்ணீர் நீர்த் தேக்கத்தில் நிலையாகத் தங்கிவிடும்; மீதி 14 லட்சம் ஏக்கரா அடி தண்ணீர் நீர்ப்பாசனத்துக்கும் மின்சார உற்பத்திக்கும் உபயோகப்படுத்தப்படும். 1960-லிருந்து அந்த அணையும் அதைக் சேர்ந்த பகுதிக்கும் பூராவாக வேலை செய்ய ஆரம்பித்துவிடும்.

பக்ரா நங்கல் திட்டத்தின் மொத்தச் செலவு 185 கோடி ரூபாய் அல்லது 38·9 கோடி டாலர். அதில் பக்ரா அணை நிர்மாணத்துக்கு 54 கோடி ரூபாயும் (11·3 கோடி டாலர்), திருப்ப அணைகள் உட்பட கால்வாய்கள் அமைப்புக்கு 61 கோடி ரூபாயும் (12·8 கோடி டாலர்) மின்சார உற்பத்தி, சப்ளை வேலைகளுக்கு 70 கோடி ரூபாயும் (14·7 கோடி டாலர்) செலவாகும் என்று தோராயமாய் மதிப்பிடப்பட்டிடிருக்கிறது.



பக்ரா நங்கல் அணையின் பல தோற்றங்கள்

1-வது படம்: பக்ரா அணைக் கட்டு ஸ்தலத்தில் அணை நிர்மாண வேலை நடந்து கொண்டிருப்பதைக் காணலாம்.

2-வது படம்: பக்ரா அணைவாய்ப் பகுதியில் வேலை நடப்பதைக் காட்டுகிறது.

3-வது படம்: பக்ரா மின்சார நிலையம் நிர்மாணிக்கப்பட்டு வருவதைக் காணலாம்.

4-வது படம்: நங்கல் அணையின் ஒரு தோற்றம்.

# பாதிரி வடக்கன் தலைமையில் கம்யூனிஸ்டல்லாத கட்சிகள்

## பலம் வாய்ந்த "சாந்தி சேனை" அமைக்கப் போகிறார்களாம்!

### புதிய தலைவர்களுக்குத் திட்டம்!

திருச்சூர், செப். 1—

கம்யூனிஸ்டு எதிர்ப்பு முன்னணித் தலைவரான பாதிரி வடக்கனால் கூட்டப்பட்ட கேரள ராஜ்யத்திலுள்ள சகல கம்யூனிஸ்டல்லாத கட்சிகளின் பிரதிநிதிகள் இன்று இங்கு கூடி "ஒரு பலம் வாய்ந்த சாந்திசேனை" அமைக்க முடிவெடுத்துள்ளார்கள்.

இந்த 'சாந்தி சேனை' மக்களின் ஜனநாயக உரிமைகளை பாதுகாக்கப்போகிறதாம். மக்களின் சமூக வாழ்க்கையைப் பாதுகாக்கப் போகிறதாம். இந்தக் கூட்டத்திற்கு பி.எஸ்.பி. தலைவர் ஸ்ரீதரன் தலைமை வகித்தார். முன்னாள் முதலமைச்சர் பனம்பள்ளி கோவிந்த மேனன், பி. எஸ். பி. தலைவர் டாக்டர் கே பி. மேனன், முஸ்லிம் லீக் தலைவர் ஜனுப் பட்பாகி தங்கள் ஆகியோர் மேற்கூறிய கூட்டத்தாரின் முயற்சிகள் வெற்றியடையும்படி கூறி வாழ்த்துச் செய்திகள் அனுப்பியுள்ளனர்.

இந்தக் கூட்டத்தில் ராஜ்யத்திலுள்ள 'எல்லா ஜனநாயகக் கட்சிகளும்' முன்வந்து மேற்கூறிய வடக்கனின் சாந்தி சேனைக்கு தக்க தலைமை வகிக்குமாறு கேட்டுக்கொள்ளும் ஒரு தீர்மானம் நிறைவேற்றியுள்ளது. இந்த சாந்தி சேனைக்கு ஒரு திட்டம் வகுக்கும் பொருட்டு தலைவர்கள் மாநாடு ஒன்று நடத்தும்படி திரு. ஸ்ரீதரனை இந்தக் கூட்டம் கேட்டுக்கொண்டது.

இதன் பிறகு வடக்கன் பாதிரி ஒரு பொதுக் கூட்டத்தில் பேசுகையில், இந்த சாந்தி சேனை பாதிரிகளால் நடத்தப்படும் ஸ்தாபனம் என்று கம்யூனிஸ்டுகள் கூறுவது சரியல்ல என்றார். இது மக்களுக்குச் சமூக சேவை செய்வதற்காக அமைக்கப்பட்ட சர்வகட்சி ஸ்தாபனம் என்றார்.

## ருமேனியா உதவியுடன் எண்ணெய்த் தொழில் நிலையம்

### திட்டமந்திரி தகவல்

கல்கத்தா, செப். 1—

அமிஸ்கான் என்னுமிடத்தில் 10 லட்சம் டன் எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலை நிறுவப்படும் என்று திட்ட அபிவிருத்தி மந்திரி காமாக்ய பிரசாத் திரிபதி கூறினார். எண்ணெய் வயல்களிலிருந்து தொழிற்சாலைக்கு பைப்லைன்கள் அஸாம் எண்ணெய்க்கம்பெனியாரால் போடப்படும் என்றார். தொழிற்சாலை ருமேனியா உதவியுடன் நிறுவப்படுகிறது என்றார்.

## போனஸ்தான் வேண்டும்

### இன்ஷூரன்ஸ் தொழிலாளர் தலைவர் வலியுறுத்தல்

பம்பாய், செப். 1—

ஆயுள் இன்ஷூரன்ஸ் கார்ப்பரேஷனைச் சேர்ந்த ஊழியர்களுக்குப் போனஸ் தர இயலாது என்றும் அதற்குப் பதிலாக இலவச இன்ஷூரன்ஸ் போன்ற சலுகைகள் அளிக்கலாமென்றும் ஆயுள் இன்ஷூரன்ஸ் கார்ப்பரேஷன் தலைவர் பி. ஏ. கோபாலகிருஷ்ணன் நேற்றுக் கூறினாரல்லவா? இப்படி அவர் போனஸ் தர மறுக்கமுடியாது என்று அகில இந்திய ஆயுள் இன்ஷூரன்ஸ் ஊழியர் சங்கத் தலைவர் ஆர். வி. மெனசெஸ் இன்று பம்பாயில் கூறினார். தொழிலாளருக்கு போனஸ்தான் வேண்டுமென்றும், இந்தப் பிரச்சினை இந்திய சர்க்காரால் சமரசத்திற்கு விடப்பட்டிருக்கும்போது கார்ப்பரேஷன் தலைவர் இப்படிப் பேசுவது முறையல்லவென்றும் அவர் தெரிவித்தார். (பி. டி. ஐ.)

## கேரள அமைச்சர் மஜீத் காரைத் தாக்கிய வழக்கில் எதிரிகள் விடுதலை!

### சாட்சிகளை நம்ப முடியவில்லை என நீதிபதி தீர்ப்பு!

கோட்டயம், செப். 1—

சில மாதங்களுக்கு முன்னால் கேரள மராமத்து இலாகா அமைச்சர் டி ஏ. மஜீத்தும், பி டி. புன்னூஸும் (கம்யூனிஸ்ட் எம். பி) ஒரு காரில் சென்றுகொண்டிருந்தபொழுது ரௌடிகளின் கூட்டம் ஒன்று அவர்களின் காரைத் தாக்கி சேதப்படுத்தினர்; அவர்களைக் கொல்ல முயற்சி செய்தனர், என்று 25 பேர்களின் மீது ஒரு வழக்குப் போடப்பட்டிருந்தது.

அந்த வழக்கில் எல்லா எதிரிகளையும் விடுதலை செய்து, அடிஷனல் செஷன்ஸ் நீதிபதி திரு. நாராயண மேனன் தீர்ப்பளித்துள்ளார்.

அந்தத் தீர்ப்பில், மேற்படி 25 பேர் மீது பிராசிகூஷன் தரப்பில் குற்றத்தை நிரூபிக்க முடியவில்லையென்றும், சாட்சிகளெல்லாம் நம்ப முடியாதவையாக இருந்தன என்றும் நீதிபதி கூறியுள்ளார்.

## தேபருக்கு கேரள முதலமைச்சர் கடிதம்

திருவனந்தபுரம், செப். 1—

காங்கிரஸ் அக்ராசனர் திரு. யு. என். தேபர் கேரளத்திற்கு விஜயம் செய்யும்போதுதான் அவரை சந்தித்துப்பேச விரும்புவதாக கேரள முதலமைச்சர் இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட், தேபருக்குக் கடிதம் எழுதியுள்ளார்.

திரு. தேபர் 7ந் தேதியன்று திருவனந்தபுரம் வந்து சேருவார் என்று எதிர்பார்க்கப்படுகிறது. தேபர் செப். 3 முதல் கேரளத்தில் ஒருவாரம் சுற்றுப்பிரயாணம் செய்வார்.

### மேனன்-இ. எம். எஸ். சந்திப்பு

கேரளத்தில் தற்பொழுது சுற்றுப் பிரயாணம் செய்துவரும் யூனியன் பாதுகாப்பு மந்திரி வி. கே. கிருஷ்ணமேனனை, இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட் எர்ணாகுளத்தில் நேற்று சந்தித்துப் பேசினார். திரு. மேனன் நாளைக் காலை டில்லி திரும்புவார்.

## சென்னை சங்கீத நாடக சங்கம்

### சர்க்கார் நியமனங்கள்

சென்னை, ஆக. 30

சென்னை ராஜ்ய சங்கீத நாடக சங்கத்திற்கு ஆக. 28 முதல் மூன்றுண்டுகளுக்கு சென்னை சர்க்கார் நியமனம் செய்துள்ள உறுப்பினர்கள் பின்வருமாறு எஸ். வெங்கட்ராமன் ஐ. சி. எஸ். (தலைவர்), கே. வி. ராமநாதன் ஐ. ஏ. எஸ். (பொருளாளர்) பெரியசாமி தூரன், கே. சந்திரசேகரன், எம் ஜி. ராமச்சந்திரன் பி. எஸ். வீருசாமிப்பிள்ளை, ஸ்ரீமதி சௌந்தரம் கைலாசம் உறுப்பினர்கள்.

## மார்க்கெட் நிலவரம்

சென்னை, செப். 2—

| | | |
|---|---|---|
| சவரன் | ரூ. | 73-00 |
| தங்கம் (ரெடி) | ரூ. | 109-75 |
| மூசை தங்கம் | ரூ. | 107-75 |
| வெள்ளி 100 தோலா எடை | | 189-00 |
| வெள்ளி 1 ரூ. எடை | | 1-91 |

### மணிலா பயறு

| | |
|---|---|
| 531 ராத்தல்கொண்ட பாரம் (விற்பனை வரி உள்பட) கோடை சரக்கு | 187-00 முதல் 186-00 |

### மணிலா எண்ணெய்

500 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி மதராஸ் கிடங்கு (டெலிவரி (மொத்த விலை)

| | |
|---|---|
| ரெடி | 358-00 |
| செப்டம்பர் | 350-00 |
| அக்டோபர் | 341-00 |

### விளக்கெண்ணெய்

| | |
|---|---|
| (500 ரா. பாரம் 1-க்கு) மதராஸ் கிடங்கு டெலிவரி திருப்பத்தூர் | 330-00 |
| சேலம் "தாமரை அன்னம்" (37½ ரா.) (டின் 1-க்கு) | 26-50 |

### தேங்காய் எண்ணெய்

37½ ராத்தல் (டின் ஒன்றுக்கு)

| | |
|---|---|
| எம். எஸ். மார்க்கு | 40-75 |
| அம்பு மார்க் | 39-50 |
| ராஜா | 39-75 |

### சர்க்கரை

(2 அந்தர் மூட்டை 1-க்கு "நெட்" விலைகள்)

| | |
|---|---|
| சாமல்கோட்டை | 107-00 |
| உய்யூரு | 107-75 |

### கல்கத்தா மார்க்கெட்

கல்கத்தா, செப். 1—

| | |
|---|---|
| சவரன் | 71-25 |
| தங்கம் பார்வர்டு | 183-62 |
| டெசி | 183-62 |
| மைசூர் தங்கம் | 110-50 |
| வெள்ளி ரெடி | 182 62 |

# திட்ட வேலைகள் திறம்பட நடக்க முக்கூட்டு மாநாடு

## லால்பகதூர் சாஸ்திரி அறிவிப்பு

புதுடில்லி, செப். 1—

தொழிலாளர் பிரதிநிதிகளும், தொழில் ஸ்தாபன நிர்வாகிகளும், மத்திய, ராஜ்ய சர்க்கார்களின் பிரதிநிதிகளும் அடங்கிய ஒரு முக்கூட்டு மாநாடு சீக்கிரம் கூட்டப்படுமென்றும், அதில் இரண்டாவது திட்ட வேலைகளில் மூலப்பொருள்கள் இல்லாத காரணத்தால் தொழில் நிறுத்தம் ஏற்படுகிறபோது 'லே ஆப்' கொடுக்கப்படுவதுபற்றி திரு. லால்பகதூர் சாஸ்திரி இன்று லோக சபையில் தெரிவித்தார்.

### திருமதி ரேணு சக்கரவர்த்தி

மெஸர்ஸ் பர்ன் அண் கம்பெனியில் வேலை செய்யும் 1100 தொழிலாளர்களுக்கு லே ஆப் கொடுத்ததுபற்றி சில நாட்களுக்கு முன் கம்யூனிஸ்ட் அங்கத்தினர் திருமதி. ரேணு சக்கரவர்த்தி ஒரு அவசரத் தீர்மானம் அனுப்பியிருந்தார். இந்தக் கம்பெனி வேலை செய்யாத காரணத்தால், பிலாய் துர்க்காபூர் உருக்கு தொழிற்சாலைகளுக்கு அனுப்ப வேண்டிய இரும்பு சாமான்கள் அனுப்பப்படாமலிருந்ததென்றும், பல இன்ஜினீரிங் பட்டறைகளும் வேலையற்று மூடவேண்டிய நிலைமை ஏற்பட்டதென்றும் ரேணு சக்கரவர்த்தி குறிப்பிட்டிருந்தார்.

அதன் பேரில்தான் அமைச்சர் லால்பகதூர் சாஸ்திரி மேற்கண்ட தகவலை வெளியிட்டார்.

## மேட்டுப்பாளையத்தில் 144 தடையுத்தரவு

(நமது நிருபர் தந்தி)

மேட்டுப்பாளையம், செப். 1—

கோவை எக்ஸ் - அபீஷியோ முதல் வகுப்பு மாஜிஸ்ட்ரேட், இங்கு நேற்று முதல் 10 நாட்களுக்கு ஊர்வலங்கள், கூட்டங்கள் போன்றவற்றைத் தடுக்கும் 144 தடையுத்தரவைப் பிறப்பித்துள்ளார்.

சிக்கதாசம்பாளையம் உட்பட மேட்டுப்பாளையம் முனிசிபல் எல்லைக்குள் இந்த உத்திரவு அமுலாகும். இங்கு நிலச்சுவான்தார்களுக்கும், பாக்குத் தொழிலாளர் சங்கத்துக்கும் இடையிலுள்ள தொழிற் தகராறு சம்பந்தமாகவே இந்தத் தடையுத்திரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது.

திருமதி ரகுபதிதேவி (காங்கிரஸ் எம். எல். ஏ.) வீட்டின் முன் மறியலில் ஈடுபட்ட 10 தொழிலாளர்கள்—2 பெண்கள் உட்பட—கைது செய்யப்பட்டனர்.

லேபர் ஆபீசர் தலையிட்டு, நாளையதினம், சமரஸப் பேச்சுகளைத் துவக்கி வைக்கிறார்.

இன்று துவங்குவதாக இருந்த கே. வெள்ளியங்கிரியின் உண்ணாவிரதம் ஒத்திவைக்கப்பட்டுள்ளது

## வேறு கட்டிடத்துக்கு பள்ளியை மாற்றுக!

திருவனந்தபுரம், செப். 1—

இங்குள்ள ஒரு பள்ளிக்கூடத்தின் கட்டிடம் உறுதியாக இல்லை. எனவே புதுக் கட்டிடத்துக்கு பள்ளியை மாற்ற வேண்டுமென்று கோரி 100 மாணவர்கள், சர்க்கார் காரியாலயத்தின் முன் ஆர்ப்பாட்டம் செய்தார்கள்.

மராமத்து மந்திரி மஜீத், மாணவர் பிரதிநிதிகளிடம், சீக்கிரம் வேறு கட்டிடத்துக்கு மாற்ற ஏற்பாடு செய்வதாக தெரிவித்தார்.

## ஆமதாபாத்தில் மீண்டும் ஊரடங்கு

ஆமதாபாத், செப். 1—

ஆமதாபாத் காங்கிரஸ் மாளிகையைச் சுற்றி அரை மைல் வட்டத்திலுள்ள பிரதேசத்தில் நாளை காலை 7 மணி முதல் 2 மணி நேர ஊரடங்கு சட்டம் விதித்துள்ளதாக அதிகாரிகள் இன்று மாலை தெரிவித்தனர்.

# மத்தியப் பிரதேசத்தில் உணவு நிலைமை மோசமாகிறது

## கம்யூனிஸ்டு, பி. சோ. ஒத்திவைப்புத் தீர்மானம்

போப்பால், செப். 1—

மத்தியப் பிரதேசத்தில் உணவு நிலைமை மோசமாகிவிட்டதை விவாதிக்க சட்டசபை நடவடிக்கைகளை ஒத்திவைக்க வேண்டுமென்று ம. பி. ராஜ்ய சட்டசபையில் கம்யூனிஸ்டு உறுப்பினர் ஹேமிதாஜி பி. சோ. உறுப்பினர் எல். என். நாயக், ஹிந்து மகாசபை உறுப்பினர் எல். என். குப்தா ஆகியோர் ஐந்து ஒத்திவைப்புத் தீர்மானங்கள் கொண்டுவந்தனர்.

உணவு நிலைமை கவலைக்கிடமாகத்தானிருக்கிறது என்றும், தானியங்களின் விலைவாசிகள் உயர்ந்துகொண்டேதான் போகின்றன என்றும், இந்த நிலைமையை ராஜ்ய சர்க்கார் சமாளிக்கத் தவறி விட்டதென்றும் ஒத்திவைப்பு தீர்மானங்கள் குற்றம் சாட்டின.

முதலமைச்சர் சார்பில் பேசிய ரெவினியூ அமைச்சர் திரு. பி. ஏ. மண்டோலி, இந்த விஷயத்தை விவாதிக்க ஒருநாள் ஒதுக்கப்படும் என்று ஒப்புக்கொண்டபின் ஒத்திவைப்புத் தீர்மானங்கள் வற்புறுத்தப்படவில்லை.

## ஹுசேனின் தாய், மகள் ஐரோப்பா சென்றனர்

நிக்கோசியா, செப். 1—

பிரிட்டிஷ் துருப்புகளின் பாதுகாவலில் உயிர்வாழ்ந்து வரும் ஜோர்டன் மன்னர் ஹுசேனின் தாய், ராணி ஜின்னும் மகளும் ஐரோப்பாவில் யாருக்கும் தெரியாத ஓரிடத்திற்கு சென்றனர்,

# 20 நாளில் மந்திரிசபை அமைத்து விடுவாராம்!

## தேபரை சந்தித்து வந்த குபேர் கூறுகிறார்

பாண்டிச்சேரி, செப். 1—

செப்டம்பர் மாதம் 23ந் தேதிக்கு முன்னாலேயே, மந்திரி சபை ஜாபிதாவை சமர்ப்பித்து விட முடியுமென்ற நம்பிக்கையை காங்கிரஸ் மேலிடத்தைச் சந்தித்துவிட்டு இங்கு வந்துள்ள குபேர் தெரிவித்தார். டில்லியில் காங்கிரஸ் தலைவர் தேபர், குபேரையும், குபேர் கட்சியிலிருந்து பிரிந்து வந்தவர்களின் பிரதிநிதியான ரங்கசாமி பிள்ளையையும் கூட்டிவைத்து விவாதம் நடத்தினதின் விளைவாக இந்தப் புது நிலைமை எழுந்ததாகவும், விவாதம் திருப்திகரமாக நடந்ததாகவும், இந்த அசெம்பிளிக் கூட்டம் முடிவதற்கு முன்னாலேயே மந்திரிசபை அமைப்பதில் உடன்பாடு ஏற்பட்டு விடுமென்றும் பி டி. ஐ. நிருபரிடம் குபேர் கூறினார்.

### மந்திரி சபை இல்லாத ஆட்சி

அதிர்ப்தியடைந்து வெளியேறியவர்களெல்லாம் மீண்டும் தாய்க் கூட்டுக்குள் வந்து, நெருக்கடியைத் தீர்த்து இரண்டாவது திட்டத்தை வெற்றிகரமாக நடத்த முன் வருமாறு குபேர் விண்ணப்பித்துக் கொண்டார்.

கடந்த 3 மாதங்களாக பிரதம கமிஷனர் மந்திரி சபையின் ஆலோசனை இல்லாமலேயே ஆட்சி நடத்தி வருகிறார்,

## பெட்ரோலியம் ஊழியர் ஸ்ட்ரைக் ஒத்திவைப்பு

புதுடில்லி, செப். 1—

செப் 5-ல் ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம் செய்வதென்ற தங்கள் முந்திய முடிவை ஒத்திப் போடுவதென்று அ. இ. பெட்ரோலியம் தொழிலாளர் சம்மேளனம் முடிவு செய்தது. சம்மேளனத்தின் சார்பில் ஒரு தூதுக்குழு தொழிலாளர் மந்திரி குல்ஜாரிலால் நந்தாவை சந்தித்து ஒரு தேசிய ட்ரிப்யூனல் ஏற்படுத்தும்படி வற்புறுத்தியது.

# எட்டயபுரத்தில் பாரதி விழா

## பிரமாத ஏற்பாடுகள்

மதுரை, செப். 1—

கவிச் சக்கரவர்த்தி சுப்ரமண்ய பாரதி பிறந்த எட்டயபுரத்தில், செப்டம்பர் 11, 12 தேதிகளில் பாரதி விழா கோலாகலமாகக் கொண்டாடப்படும். விழாவை முதலமைச்சர் திரு. காமராஜர் துவக்கிவைப்பார். நிதியமைச்சர் திரு. சி. சுப்ரமண்யம் கொடியேற்றுவார். உள்துறை அமைச்சர் திரு. பக்தவத்சலம் இலக்கிய அரங்கத்தை ஆரம்பித்து வைப்பார்.

பிரபல சினிமா, நாடக கலைஞர் திரு. சிவாஜி கணேசன், இவ்வருட பாரதி விழா ஏற்பாடுகளைச் செய்ய முன்வந்துள்ளார்.

திருவாளர்கள் ம பொ. சிவஞான கிராமணியார், கி. வா. ஜகந்நாதன், ப. ஜீவானந்தம், டாக்டர் மு. வரதராசனார், டி. கே. ஷண்முகம், ஏ. பி. நாகராஜன், எஸ். டி. சுந்தரம் ஆகியோர் விழாவில் பங்கு கொள்ளுவார்கள்.

பாரதி நினைவு மண்டபம் கட்டிய காலஞ்சென்ற கல்கி ஆசிரியர் கிருஷ்ணமூர்த்தியின் திருவுருவப் படத்தை திரு. எஸ். எஸ். வாசன் திறந்து வைப்பார்.

இரண்டு நாட்களிலும் இலக்கிய விவாதங்களும், சொற்பொழிவுகளும், பாட்டுக் கச்சேரிகளும் நடைபெறும்.

நிகழ்ச்சிகளை அகில இந்திய ரேடியோ ஒலிபரப்பும்.

### அதிசயப் படுகிறார்கள்

புது டில்லி, செப். 1—

நேதாஜியின் தோழன் என்று கூறிக் கொள்ளும் ஆஜாத் கோபிசிங் என்பவர் 9 மாதங்களாக உண்ணா விரதமிருந்து வருகிறார். இர்வின் ஆஸ்பத்திரியில் இருக்கும் இவரது நிலைகண்டு டாக்டர்கள் அதிசயப்படுகிறார்கள்.

—நியூ டைம்ஸ்.

## அமெரிக்காவின் படபடப்பு!

ஹாங்காங், செப். 1—

அமெரிக்காவின் ராணுவ காரியதரிசி வில்பர் புருக்கர் குமாய் நிலைமை பற்றி பேசுகையில், "சீன சர்க்கார் ஆக்ரமிப்பு செய்து வருவதாகவும், 'சுதந்திர உலகை' காப்பாற்ற பார்மோசாவுடன் அமெரிக்காவும் சேர்ந்து நிற்குமென்றும், சம்பவங்களைக் கூர்ந்து கவனித்து வருவதாகவும் தெரிவித்தார்.

திருவாங்கூர்

# ரேயன்ஸ் கம்பெனியில் மூன்று வருட தொழில் சமரஸ ஒப்பந்தம்

## 1000 தொழிலாளர் பயனடைவர்

எர்ணாகுளம், செப். 1—

கேரளத்தில் பெரும்பாவூரிலுள்ள திருவிதாங்கூர் ரேயன்ஸ் லிமிடெட் கம்பெனியின் நிர்வாகத்தின் பிரதிநிதிகளும் தொழிலாளர், குமாஸ்தாக்கள் சங்கங்களின் பிரதிநிதிகளும் சென்ற வாரத்தில் விசேஷ தொழில் கோர்ட் நீதிபதி திரு. டி. கே. ஜோஸப் அவர்களின் முன்பு கூட்டு முறையில் சமர்ப்பித்துள்ள ஒரு மனுவில் தங்களிடையே தொழில் சமரஸ ஒப்பந்தம் ஒன்று ஏற்பட்டுள்ளதாகக் கூறப்பட்டுள்ளது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் மீதமுள்ள மூன்று வருடங்களுக்கு இந்தத் தொழில் சமரஸம் அமுலிலிருக்கும்.

கம்பெனியின் லாபத்தின் அடிப்படையில் தொழிலாளர்களுக்கு போனஸ் வழங்கும் திட்டம் இந்த ஒப்பந்தத்தின் பிரதான அம்சம்.

இந்த வருட ஆரம்பத்தில் இந்தக் கம்பெனியில் வேலை செய்யும் தொழிலாளிகளும், குமாஸ்தாக்களும் தங்கள் கோரிக்கைகள் சம்பந்தமாக வேலை நிறுத்தத்தில் இறங்கியிருந்தனர். ஒரு மாத காலம் இந்த வேலை நிறுத்தம் நடைபெற்றது. இந்தத் தகராறில் விசாரணை செய்யும்படியாகக் கேரள சர்க்கார் நீதிபதி டி. கே. ஜோஸப்பைத் தொழிற் கோர்ட்டாக நியமித்தனர்.

இதற்கிடையில் தான் மேற்படி கம்பெனியின் நிர்வாகத்திற்கும், தொழிற் சங்கப் பிரதிநிதிகளுக்கும் இடையே இந்த 3 வருஷ சமரஸ ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளது.

இந்த ஒப்பந்தத்தினால் குமாஸ்தாக்கள் உட்பட சுமார் 1000 ஊழியர்கள் பயனடைவர். (பி. டி. ஐ.)

# ஹாலந்துடன் உறவுகள் துண்டிக்கப்படும்!

## சுகர்ணோ அறிவிப்பு

ஜாகர்த்தா. செப். 1—

மேற்கு இரியன் தகராறு காரணமாக இந்தோனேஷியா ஹாலந்துடன் சகல காலனி உறவுகளையும், பொருளாதார உறவுகளையும் முறித்துக்கொள்ளும் என்று இந்தோனேஷிய ஜனாதிபதி சுகர்ணோ இன்று தெரிவித்தார்.

நியூகினித் தீவில் இன்னும் டச்சு ஆதிக்கத்தின் கீழ் உள்ள மேற்கு இரியன் பகுதியை மீட்பதற்கு இந்தோனேஷியாவுக்கு உள்ள மாற்றுவழி இதுதான் என்றும் சுகர்ணோ தெரிவித்தார்.

இந்தோனேஷியாவில் பாந்துங் நகரில் ஒரு சேமிப்பு பாங்கை திறந்து வைத்துப் பேசுகையிலேயே சுகர்ணோ அவ்வாறு கூறியதாக ஜாகர்த்தா ரேடியோ தெரிவித்தது.

"எல்லா டச்சுக் கம்பெனிகளையும் இந்தோனேஷிய சர்க்கார் மேற்கொண்டுவிட்டது. இப்பொழுது டச்சுப் பொருளாதார உறவுகளும் துண்டிக்கப்பட்டால், மேற்படி கம்பெனிகள் மூலம் ஹாலந்துக்குக் கிடைக்கும் லாபங்களையும் இந்தோனேஷியா எடுத்துக் கொண்டுவிடும்" என்று சுகர்ணோ தெரிவித்தார் என்று ஜாகர்த்தா ரேடியோ மேலும் கூறியது. (பி. டி. ஐ.)

## வேலை நிறுத்தம் செய்ய கேரள மின்சார ஊழியர் முடிவு

எர்ணாகுளம், செப். 1—

கேரள ராஜ்ய மின்சாரபோர்டு நிர்வாக ஊழியர்கள் சங்கம், தங்கள் கோரிக்கைகளை போர்டு வழங்காதபட்சத்தில் நவம்பர் 5ந் தேதியிலிருந்து ஒரு பொதுவேலை நிறுத்தம் செய்வதென்று முடிவு செய்துள்ளது.

நேற்று கூடிய மேற்படி சங்கத்தின் மத்தியக் கவுன்சில் இவ்வாறு முடிவு செய்தது.

# அணுசக்தியை சமாதானப் பணிகளுக்கு உபயோகப்படுத்த ஜெனிவா மாநாடு

## சோவியத் பிரதமர் செய்தி

ஜெனிவா, செப். 1—

அணு ஆயுதங்களைத் தடை செய்யும் ஒரு ஒப்பந்தத்திற்கு வருமாறு சோவியத் பிரதமர் குருஷ்சேவ் இன்று இதர வல்லரசுகளுக்கு வேண்டுகோள் விடுத்தார். அப்பொழுதுதான் அணுசக்தித் தொழிலின் முழு சக்தியையும் சமாதானத்திற்காகவும் முன்னேற்றத்திற்காகவும் உபயோகப்படுத்த முடியும், என்றும் குருஷ்சேவ் அதில் கூறியுள்ளார்.

இங்கு ஐ. நா. சபை சார்பில் நடைபெறும் "சமாதானத்திற்கு அணுசக்தி" மகாநாட்டுக்கு குருஷ்சேவ் அனுப்பிய செய்தியில், சர்வதேச விஞ்ஞான தொழில் நுணுக்க ஒத்துழைப்புத் துறையில் இம் மகாநாடு ஒரு பெரிய சம்பவம் என்று வர்ணித்துள்ளார்.

அவருடைய செய்தி மேலும் குறிப்பிடுவதாவது:

"அணு சக்தியை சமாதான வேலைகளுக்குப் பயன்படுத்தும் துறையில் விஞ்ஞானத்தினுடையவும், தொழில் நுட்பத்தினுடையவும் ஒப்பற்ற சாதனை உண்மையாகவே சரித்திரப் பிரசித்தம் வாய்ந்த முக்யத்துவமுடையது. பெரிய நாடுகளிலும் சரி, சிறிய நாடுகளிலும் சரி விஞ்ஞானிகள், இன்ஜினீயர்கள், பல ஆயிரக் கணக்கான சாதாரண மக்கள் ஆகியோரின் இடையறாத முயற்சிகளின் காரணமாகத்தான் பிரதானமாக இந்த சாதனைகள் மனித சமுதாயம் முழுவதற்கும் கிடைத்துள்ளன.

அணு ஆயுதங்களைத் தடை செய்யவும் சகல நாடுகளின் ஆயுதக் கிடங்குகளிலிருந்தும் அவைகளை ஒதுக்குவது பற்றியும் ஒரு உடன்பாடு ஏற்படுமேயானால், அணுசக்தி விஞ்ஞானம், தொழில் நுட்பம் சம்பந்தமாக ஏற்படும் ஒத்துழைப்பு மிக, மிகப் பயனுள்ளதாயிருக்கும். அப்பொழுது அணுசக்தித் தொழிலின் வல்லமை பூராவையும் சமாதானத்திற்காகவும் முன்னேற்றத்திற்காகவும் செலவிட முடியும். அணுசக்தியை சமாதானப் பணிகளுக்குமட்டும் உபயோகப்படுத்துவதில் ஞானிகள் தங்களுடைய சகல அறிவையும், அனுபவத்தையும் ஈடுபடுத்துவார்கள் என்று நான் நம்புகிறேன்", என்று குருஷ்சேவ் கூறியுள்ளார்.

(ராய்ட்டர்)

# பிரிட்டிஷ் கடன்காரர்களை மொரார்ஜி சந்தித்தார்

## அமெரிக்காவுக்கும் போவார்

லண்டன், செப் 1—

இந்திய நிதிமந்திரி மொரார்ஜி தேசாய் கடன்வாங்க பிரிட்டனுக்குப் போயிருக்கிறார். இன்று பிரிட்டிஷ் பொக்கிஷ மந்திரி, பிரதமர் மாக்மில்லன், காமன்வெல்த் உறவு காரியதரிசி, மற்றும் பல பெரிய அதிகாரிகளைச் சந்தித்து விருந்துண்டார்.

இரண்டாவது ஐந்தாண்டு திட்டம் நிறைவேறுமுன், இந்தியாவுக்கு 560 கோடி ரூபாய் (42 கோடி பவுன்) அன்னியச் செலாவணி தேவைப்படுமாம்.

இந்தியாவுக்கு கடன்கொடுத்த கடன்கார நாடுகளான அமெரிக்கா, பிரிட்டன், கனடா, மேற்கு ஜெர்மனி, ஜப்பான் ஆகிய 5 நாடுகளும் 4 நாட்களுக்குமுன் வாஷிங்டனில் கூடி எடுத்த முடிவின் பேரில்தான் இப்போது கடன் கொடுக்கப் போகிறார்களாம்.

லண்டனிலுள்ள இந்திய ஹைகமிஷனர் திருமதி விஜயலக்ஷ்மி பண்டிட், மொரார்ஜிக்கு விருந்து வைத்தார். ஒரு வாரம் பிரிட்டனில் தங்கி, வந்த காரியத்தைப் பார்த்துவிட்டு, 4 வாரம் அமெரிக்கா, கனடா, ஆகிய நாடுகளுக்கு மொரார்ஜி போவாரென்றும், செப்டம்பர் 15ல் தொடங்கும் காமன்வெல்த் பொருளாதார வர்த்தக மாநாட்டில் கலந்துகொள்ளுவாரென்றும் தெரிகிறது.

# இந்திய-பாக். பேச்சுகள் தோல்வி

## பாக். பிரதமர் நூன் அறிவிப்பு

கராச்சி, செப். 1—

இந்திய–பாகிஸ்தான் எல்லைத் தகராறுகளுக்குத் தீர்வு காணும் நோக்கத்துடன் கராச்சியில் நடைபெறும் இந்திய, பாகிஸ்தான் சர்க்கார் காரியதரிசிகள் மகாநாடு அனேகமாகப் பூரணமாகத் தோல்வியடைந்துவிட்டது என்று பாகிஸ்தான் பிரதமர் பிரோஸ்கான் நூன் இன்று பாக், தேசிய அசெம்பிளியில் தெரிவித்தார்.

இங்கிலையில் செப். 10 ல் தான் புது டில்லிக்குச் சென்று இந்தியப் பிரதமருடன் நடத்தும்பேச்சு வார்த்தைகள் மிகவும் கஷ்டமாக இருக்கப் போகின்றன, என்றும் நூன் தெரிவித்தார்.

நூனின் அறிக்கை பற்றி இந்தியப் பிரதிநிதி கோஷ்டியினர் கருத்துத் தெரிவிக்க மறுத்தனர். பேச்சுகள் நாளையும் தொடங்கும் என்று அவர்கள் கூறினர்.

## ஆபத்தான நிலையில் சாக்சேனு!

### கம்யூனிஸ்டு, பி. சோ. எம்.பி.கள் கூட்டறிக்கை

புதுடெல்லி, செ. 1—

கிழக்கு உத்திர பிரதேசத்தில் உணவு நிலைமை மோசமாகிவிட்டதால் இதை உடனடியாக நிவர்த்திக்கும்படி கோரி சாகும்வரை உண்ணாவிரதம் இருந்துவரும் பேராசிரியர் சிப்பன்லால் சாக்சேனு நிலைமை மிகுந்த கவலைக்கிடமாகிவிட்டது என்று பாராளுமன்ற உறுப்பினர்களான திரிதிப் சௌத்ரி, பூபேஷ்குப்தா, இஜட் ஏ. அகமத், பிரபாத்கார், பரீட் அன்சாரி ஆகிய 44 பேர் தமது கூட்டு அறிக்கையில் கூறுகின்றனர்.

மத்திய சர்க்காருக்கும் உ. பி. ராஜ்ய சர்க்காருக்கும் திரு. சாக்சேனு பலதடவை வேண்டுகோள் விடுத்துப் பார்த்தார். அவரது கோரிக்கைகள் மிகமிக நியாயமானவை. அவைகளை ஏற்று அமுல் நடத்தினால் உணவு நிலைமை அபிவிருத்தி அடையும் என்று அந்தக் கூட்டு அறிக்கை கூறுகிறது.

## வள்ளத்தோள் நினைவு நிதி

கோழிக்கோடு, செப். 1—

கேரள மகாகவி வள்ளத்தோள் நினைவுச் சின்னத்திற்காக வசூலிக்கப்பட்டு வரும் நிதிக்கு இதுவரையில் பத்தாயிரம் ரூபாய்க்குமேல் வசூலாகியிருப்பதாக குழுத்தலைவர் அறிவிக்கிறார்.

விளையாட்டு

## திருவனந்தபுரத்தில் டேபிள் டென்னிஸ்

திருவனந்தபுரம், செப். 1—

தென் மண்டல டேபிள் டென்னிஸ் சாம்பியன் மெடலுக்காக நடக்கும் போட்டி செப்டம்பர் 3-ம் தேதி இங்கு ஆரம்பமாகும். இந்தியாவெங்குமிருந்து 100 பேர் இதில் கலந்துகொள்வர்.

இந்தியாவின் முதல் நம்பர் விளையாட்டுக்காரர்களான கவுடம் திவான், தாக்கர்சே, இராணி, வோரா, நாகராஜ், திருவேங்கடம், பானர்ஜி, சாமிர் முக்கர்ஜி, என். சி. ராகவன், மிஸ். ரச்சேல் ஜான், மிஸ். ஜாயிஸ் டிசோஸா ஆகியோர் இந்த விளையாட்டில் கலந்துகொள்ள வருபவர்களில் முக்கியமானவர்கள்.

சென்ற தடவை இந்தத் தென் மண்டலச் சாம்பியன் விளையாட்டு சென்னையில் நடந்தது இந்த விளையாட்டு போட்டிகள் தினசரி இரண்டுதரம் நடக்கும். காலை 9 லிருந்து 1 மணிவரையும், மாலை 3 லிருந்து 9 வரையும் நடக்கும்.

இந்தப் போட்டி செப்டம்பர் 7-ந் தேதி வரையில் நடக்கும். கேரள கவர்னரின் வாழ்க்கைத் துணைவியர் திருமதி ராமகிருஷ்ண ராவ் வெற்றிபெற்றோருக்கு பரிசுகள் வழங்குவார்




### மதராஸ் 1

3—9—58

| | |
|---|---|
| காலை | முதல் ஒலிபரப்பு 319.1 மீ. (940 கி. ஸை.) |
| 7-00 | துதிப்பாடல்கள் |
| 7-10 | நிகழ்ச்சிக் குறிப்புகள் வானிலை அறிவிப்பு |
| 7-15 | தமிழில் செய்தி |
| 7-30 | எஸ். என். ராமச்சந்திரன், எஸ். என். சத்யமூர்த்தி இருவீணைகள் (திருச்சியில் உள்ளபடி) |
| 8-15 | ஒலிபரப்பு முடிவு |
| | இரண்டாவது ஒலிபரப்பு (319.1 மீ. 940 கி. ஸை.) |
| 12-30 | [illegible]ப் பள்ளிகளுக்கு |
| 1-00 | பெண்ணுலகம் (திருச்சி அஞ்சல்) |
| 130 | பஸவராஜ் ராஜகுரு |
| 1-40 | ஹிந்தியில் செய்தி |
| 1-50 | கர்நாடக சங்கீதம் |
| 2-00 | தமிழில் செய்தி |
| 2-10 | உயர்தரப் பள்ளிகளுக்கு |
| 2-40 | வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு |
| மாலை | மூன்றாவது ஒலிபரப்பு 319.1 மீ. (940 கி. ஸை.) |
| 5.30 | சுகம் சங்கீத் |
| 6-05 | பிராந்தியச் செய்திகள் |
| 7-15 | தூக்கு மாடல் கார் நாடகம் V. [illegible]. சுப்ரமண்யம் எழுதியது |
| 6-30 | கதம்பம் |
| 7-15 | தமிழில் செய்தி |
| 7-30 | வினாடி வினா (அபிவிருத்தி திட்டங்கள் பற்றியது) |
| 7-45 | செய்தி விளக்கம் (திருச்சியில் உள்ளபடி) |
| 8.00 | ஏ, ஸ்ரீநிவாச ராகவன் பாட்டு |
| 8-30 | திருப்பத்தூர் செல்லம்மாள் பாட்டு |
| 9-00 | டி. பி. சிவசங்கரன் பாட்டு |
| 9-00 | ஐரோப்பிய சங்கீதம் ஒலிபரப்பு முடிவு |

### திருச்சி

3—9—58

| | |
|---|---|
| காலை | முதல் ஒலிபரப்பு |
| 7-00 | இசைக்கதிர் துதிப்பாடல்கள் (மதராஸ்-1 அஞ்சல்) |
| 7-10 | நிகழ்ச்சிக் குறிப்புகள் |
| 7-15 | தமிழில் செய்தி |
| 7-30 | எஸ். என். ராமச்சந்திரன், எஸ். என். சத்யமூர்த்தி இரு வீணைகள் |
| 8.00 | ஆங்கிலத்தில் செய்தி |
| 8.15 | ஒலிபரப்பு முடிவு |
| | இரண்டாவது ஒலிபரப்பு |
| 12-30 | நடுத்தரப் பள்ளிகளுக்கு |
| 1-00 | பெண்ணுலகம் |
| 1-30 | அலி அக்பர்கான் ஸரோட் |
| 1-40 | ஹிந்தியில் செய்தி |
| 1-50 | குர[illegible]இசை |
| 2-00 | [illegible]ல் செய்தி |
| 2-10 | உயர்தரப் பள்ளிகளுக்கு |
| 2-40 | இடைவேளை |
| 2-45 | வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு |
| மாலை | மூன்றாவது ஒலிபரப்பு |
| 5-45 | இசைப்பயிற்சி |
| 6-00 | அறிவிப்புகள் |
| 6-05 | பிராந்திய செய்திகள் |
| 6.15 | கிராம நிகழ்ச்சிகள் |
| 7-15 | தமிழில் செய்தி |
| 7-30 | வாடாத அல்லி நாடகம் |
| 7-45 | செய்தி விளக்கம் எஸ். நடராஜன் |
| 8-00 | எஸ். என். ராமச்சந்திரன் எஸ். என். சத்யமூர்த்தி இரு வீணைகள் |
| 8-30 | டெல்லி அஞ்சல் |
| 8-30 | டி. வி. ரத்னம் |
| 9-00 | ஆங்கிலத்தில் செய்தி |
| 9-15 | வள்ளுவர் சொல்லோவியம் |
| 9.20 | இன்னிசை வடிவங்கள் |
| 9-30 | சித்ரகானம் |
| 10 00 | ஒலிபரப்பு முடிவு |

Printed & Published by S. Krishnaswamy at Janasakthi Press, 32, Broadway, Madras-1. Editor: P. JEEVANANDAM